

வல்லக்கோட்டை முருகன் துணை

# யாத்திரை தோழன் 2011

## பழநியை நோக்கி வல்லக்கோட்டை

வல்லக்கோட்டை - பழநி பாதயாத்திரை குழு, தாம்பரம்

## கோடை நகர் குமரன் தல வரலாறு

**ஸ்ரீ** அருணகிரியார் பாடல் பெற்ற வல்லக்கோட்டை எனும் தலத்தில் **'கோடை ஆண்டவர்'** எனும் திருநாமத்துடன் சுமார் 7 அடி உயரத்தில் வள்ளி, தெய்வானையுடன் திருமண கோலத்தில் அருள் பாலித்து வருகிறார், சுப்ரஹ்மண்யர்.

சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன் துர்வாஸரின் மூலம் முருகன் தான் இருக்குமிடத்தை உணர்த்திய சம்பவத்தைப் பார்ப்போம். திருநெல்வேலியுள்ள இலஞ்சி நகரத்தை பகீரதன் என்பவன் ஆண்டு வந்தான். ஒரு சமயம் நாரதர் அவனைப் பார்க்க அங்கு வந்தபோது அவரை மதிக்காமல் நடந்து கொண்டதால் அவரது சாபத்திற்காளானான். அதன் காரணத்தால் அனைத்து ஐஸ்வர்யங்களையும் இழந்து நாடோடியாய் திரிந்து வரும் வேளையில் ஒரு நாள் துர்வாஸ முனிவரைக் கண்டான். அவரும், ''இப் பாதிரி மரத்தடியில் அருள் பாலிக்கும் கோடை குமரனை மனமுருகி ப்ரார்த்தித்து வந்தால் நீ கேட்பது கிடைக்கும்'' என்று ஆசிர்வதித்தார்.

பகீரதனும் அவ்வாறே முருகனைத் தொழுது இழந்த செல்வங்களை திரும்பப் பெற்றான். அதற்கு நன்றிக் கடனாக வல்லக்கோட்டை எனும் திருத்தலத்தில் முருகனுக்கு கோயில் கட்டி அவர் பெருமையை உலகறிய செய்தான். இதுவே இக் கோயிலின் தல வரலாறு.

இக்கோயிலுக்கு செல்ல அனைத்து இடங்களில் இருந்தும் பேருந்து வசதி உண்டு.

*வல்லக்கோட்டை பழனி பாத யாத்திரை குழு*

செல் : 9962233329

## அன்னதானம் மஹாதானம்

**ம**னதார முருகனை தரிசித்துவிட்டு வருபவர்களுக்கு வயிறார உணவளிக்கிறது, **'கோடை நகர் குமரன் வார வழிபாட்டு அன்னதான குழு'** (K.K.V.K. Trust).

25 ஆண்டுகளுக்கு முன்பு மிகக்குறைந்த எண்ணிக்கையுடன் துவக்கப்பட்ட இக்குழு, தற்போது மிகப் பெரிய குழுவாக அமைந்து பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஞாயிறு, சஷ்டி, கிருத்திகை மற்றும் விசேஷ தினங்களுக்கு காலை சிற்றுண்டியும், மதியம் கூட்டுப் பிரார்த்தனையுடன் அன்னதானமும் நடத்தி வருகிறது.

தனக்கு சொந்தமான இடத்தில் இப்பணியை நடத்தி வரும் இக்குழு, பக்தர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ள காரணத்தால் இடநெருக்கடியை தவிர்க்கும் பொருட்டு இந்த இடத்துக்கருகிலேயே மேலும் நவீன வசதிகளுடன் ஒரு புதிய கட்டடம் கட்டப்பட்டுள்ளது.

அன்னதான பணியோடு வேறு பல நற்பணிகளையும் தொடர்ந்து செய்து வரும் இக்குழுவின் கூட்டு முயற்சி சிறப்படைய கோடையாண்டவரை ப்ரார்த்திக்கிறோம்.

**K.K.V.K. டிரஸ்ட் அன்னதானக் குழு**

போன் : 22262432, செல் : 9381008821

# பொருளடக்கம்

## முருகன் பாடல்கள்




Designed & Printed by

**Green Corporate**

41, Venkatesan St, West Tambaram,
Chennai - 600045. Cell : 9841578650

# பிள்ளையார் பாடல்கள்

## விநாயகர்

பாலும் தெளி தேனும் பாகும் பருப்பும்; இவை
நான்கும் கலந்துனக்கு நான் தருவேன் கோலஞ் செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீ, எனக்கு
சங்கத்தமிழ் மூன்றும் தா. ஔவையார்

## கற்பக விநாயகர் துதி

உம்பர் தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே,
தம்பிதனக் காக வனத் தணைவோனே
தந்தைவலத் தால ருள்கைக் கனியோனே
அன்பர் தமக் கான நிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானை முகப் பெருமானே

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியில் லுறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்திமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமானே

## மங்களத்து விநாயகனே

வருவாயே கணபதியே வந்தருள்வாயே!
வாயார பாடுகிறோம் வரமருள்வாயே!

மங்களத்து நாயகனே மண்ணாளும் முதலிறைவா!
பொங்குதன வயிற்றோனே பொற்புடைய ரத்தினனே,
சங்கரனார் தருமதலாய் சங்கடத்தை சம்கரிக்கும்
எங்கள் குல விடிவிளக்கே எழில் மணியே கணபதியே! (வருவாயே)

அப்பமுடன் பொரிகடலை அவலுடனே அருங்கதலி
ஒப்பிலா மோதகமும் ஒருமனதாய் ஒப்புவித்து
எப்பொழுதும் வணங்கிடவே எனையாள வேண்டுமென
அப்பனவன் மடியமரும் அருட்கனியே கணபதியே! (வருவாயே)

பிள்ளையாரின் குட்டுடனே பிழைநீக்கும் உக்கியிட்டு
எள்ளளவும் சலியாத எம் மனத்தை உமக்காக்கித்
தெள்ளியனாய்த் தெளிவதற்குத் தீந்தமிழில் போற்றுகிறேன்.
உள்ளியதை உள்ளபடி உகந்தளிப்பாய் கணபதியே! (வருவாயே)

இன்றெடுத்த இப்பணியும் இனித்தொடரும் எப்பணியும்
நன்மணியே சண்முகனார் தன்னுடனே நீ எழுந்து
என்பணியே உன்பணியாய் எடுத்தாண்டு எமைக்காக்க
பொன் வயிற்றுக் கணபதியே போற்றியெனப் போற்றுகின்றேன்!

(வருவாயே)

## பிரபோ கணபதி

ப்ரபோ கணபதே பரிபூரண
வாழ்வருள்வாயே
ப்ரபோ கணபதே..... கணபதே..... கணபதே! (ப்ரபோ)

சார்ந்து வணங்கித் துதிபாடியாடி உந்தன்
சன்னதி சரணடைந்தோமே
சாந்த சித்த சௌபாக்கியங்கள் யாவையும்
தந்தருள் சற்குரு நீயே (ப்ரபோ)

ஆதிமூல கணநாத கஜானன
அற்புத தவள ஸ்வரூபா
தேவ தேவ ஜெய விஜய விநாயக
சின்மய பரசிவ தீபா (ப்ரபோ)

தேடித் தேடி எங்கோ ஓடுகின்றார் உன்னைத்
தேடிக் கண்டு கொள்ளலாமே

கோடி கோடி மதயானைகள் பணி செய்ய
குன்றென விளங்கும் பெருமானே (ப்ரபோ)

ஞான வைராக்ய விசார ஸாரஸ்வர
ராகலய நடன பாதா
நாம பஜன குண கீர்த்தன நவநித
நாயக ஜெய ஜெகன்நாதா (ப்ரபோ)

பார்வதி பால அபார வாரவர
பரமபாகவத தரணா
பக்தஜன குமுத ப்ரணவ வினாயக
பாவன பரிமள சரணா (ப்ரபோ)

## *கணபதி ஓம்*

கணபதி ஓம் கணபதி ஓம்
ஓம் ஓம் கணபதி ஓம்.......

பிள்ளையார் சதுர்த்தியில் பிறந்தவராம் - அந்த
சங்கரன் மகனை பாடிடுவோம்
சங்கடங்கள் தீர்த்து வைக்கும் - அவர்
சந்நிதியை தினம் நாடிடுவோம் (கணபதி ஓம்)

மூலமுதற் பொருள் ஆனவர் நமக்கு
முக்தி அளித்து வரம் கொடுப்பார்
சக்தியின் மைந்தன் சண்முகன் சோதரன்
சங்கடம் தீர்த்திட துணை இருப்பார் (கணபதி ஓம்)

அவல் பொறி கடலை அப்பம் கொழுக்கட்டை
ஆனை முகனுக்கு நாம் படைப்போம்
அவர் அருளால் உயர்வு பெற்று
ஆனந்த வாழ்வை வாழ்ந்திடுவோம் (கணபதி ஓம்)

எருக்கம் பூவில் மாலைகள் கோர்த்து
எம் பெருமானுக்கு சாத்திடுவோம்
எலி வாகனத்தில் ஏறியே வருவார்
ஏழைகள் குறைகளை போக்கிடுவார் (கணபதி ஓம்)

பானை வயிற்றோன் பாதங்களை நாம்
பணிந்து சென்று வணங்கி வந்தால்
பாவங்கள் போக்கி பரிசுத்தமாக்கி
பக்தனாகவே ஏற்றுக் கொள்வார் (கணபதி ஓம்)

## விநாயகர்

அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்

கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை கண்ட உண்மை

-கவியரசு கண்ணதாசன்

## காக்கும் கணபதி

கணபதியே சாமி கணபதியே
காத்தருள வேண்டுமைய்யா கணபதியே - (கணபதியே)

கந்தனுக்கு முன் பிறந்த கணபதியே
காத்தருள வேண்டுமைய்யா கணபதியே - (கணபதியே)

வேலவனின் சோதரனே கணபதியே
விக்ன விநாயகனே கணபதியே - (கணபதியே)

மூஷிக வாகனனே கணபதியே
முன்னின்று காக்க வேணும் கணபதியே - (கணபதியே)

சக்தியின் பாலகனே கணபதியே
சங்கடங்கள் தீர்த்தருள்வாய் கணபதியே - (கணபதியே)

பானை வயிற்றோனே கணபதியே
பாசத்தோடு காக்க வேணும் - (கணபதியே)

பாசமுடன் ஓடிவந்து கணபதியே - எங்களை
பாதுகாக்க வேண்டுமைய்யா கணபதியே - (கணபதியே)

பக்தர்களின் பூசையிலே கணபதியே
எழுந்தருள வேண்டுமைய்யா கணபதியே - (கணபதியே)

எங்கும் அமர்ந்திருக்கும் கணபதியே
எல்லையில்லா பேரருளே கணபதியே - (கணபதியே)

## அம்மன் பாடல்கள்

## தையல் நாயகி பதிகம்

எள்ளுப்பூ முக்கு! எழிற்குவளைப் பூக்கண்கள்
இயல்பான அழகு வடிவம்
இனிய முகம் தாமரை! இரு செவிகள் செந்தாழை!
இறைவிநிறம் நல்ல பவளம்
கள்ளிருக்கும் ரோஜாப்பூக் கன்னங்கள்! அல்லியில்
கடைந்ததோர் இரண்டு கால்கள்
கைகளும் விரல்களும் கனகாம்பரம் மல்லி!
கற்பகப் பூவில் தோள்கள்
புள்ளிருக்கும் வேளூர் பூவையுன் அங்கமெல்லாம்
பூக்களாய் மலர்ந்திருக்க
பூவுடல் கொண்டவளை வர்ணித்துப் பாமாலை
பூமாலையோடு தந்தேன்
வல்லவள் நின் அருளாலே வரும் துயரைப் போக்கியொரு
வரம் தந்து காக்கவருவாய் - அம்மா
வைத்தீஸ்வரன்கோயில் வளர்த்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

பால் கேட்டு அழுததோர் பிள்ளைக்குச் சீர்காழிப்
படித்துறையில் பால்கொடுத்தாய்!
பச்சைவெற் றிலைதுப்பிக் கவிகாள மேகத்தைப்
பாட்டரசன் ஆக்கி வைத்தாய்
வேல் கேட்ட பிள்ளைக்கும் செந்தூரில் சமர்செய்ய
விருப்பமுடன் வேல் கொடுத்தாய்
விளையாடும் ஏழரைச் சனியோடு கிரகங்கள்
விலகிடும் வழி அமைத்தாய்
நூல் கேட்ட ஞானத்தில் நூறுகவி பாடுமெனை
நோக்கி நீஎது கொடுத்தாய்!
நொடிப்பொழுதில் என் வாழ்வில் படிப்படியாய் துயரங்கள்
நுழைவதற்கு ஏன் விடுத்தாய்!
வாழ்வரசி இனி எனது வருங்கால செல்வங்கள்
வளம்காண ஆக்க வருவாய் - அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர் தையல் நாயகியே!
வளம் காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

தா என்று கேட்டவுடன் தருவதால் தானுன்னைத்
தாய் என்று சொல்லிவைத்தார்
தலைமகன் உன் சந்நதியில் கலைமகளின் அருளாலே
தமிழ்பாடி வரங்கள் பெற்றார்

சேய் ஒன்று எதிரினிலே கதறுவது கேட்காமல்
செவிமூடி நிற்கலாமோ?
சிறுபிழைகள் இருந்தாலும் மன்னித்து அருள்காட்டும்
தேவியவள் நீயல் லவோ?
ஆயகலை அத்தனையும் அறிந்தவனை நோய்நொடிகள்
அணுகவிடல் முறை யாகுமோ?
அரியதொரு செல்வத்தை உரியமகன் ஏற்காமல்
அனு தினமும் வாடலாமோ?
வாயுவென வேகமாய் வந்தெனது துயர்தீர்த்து
மகிழ்ச்சியினைக் கொடுக்க வருவாய்! - அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர்தையல் நாயகியே!
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

தங்கநிகர் குணத்தோடு தைரியமும் தருகின்ற
தமிழ்ச்செல்வி போற்றி! போற்றி!
தரணியில் புகழ்காண வரமளிக்கும் சுந்தரியாம்
தாமரைப்பூ மாது போற்றி!
மங்கையர்க்கு மாலைகளும் மன்னவர்க்கு வேலைகளும்
மகிழ்ந்தளிக்கும் அரசி போற்றி!
மாதரசி உண்ணா மலை அழகு சிவகாமி
மங்கை மீனாக்ஷி போற்றி
பொங்கிவரும் துயரத்தை பொடியாக்க வரும்
அன்னப்பூரணி கல்யாணி போற்றி
போகமுடன் வாழ்வுதரும் பூங்கொடியாம் விசாலாக்ஷி
புனித உமாதேவி போற்றி!
மங்களங்கள் அத்தனையும் எங்களது வீடுவரை
மாதரசி கூட்டி வருவாய் - அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

மலைபோன்ற செல்வத்தை குவித்துவைத் திருந்துநான்
மற்றவர்க்கு உதவ வேண்டும்
மழலையின் குணத்தோடு முதுமையிலும் இளமையாய்
மகிழ்வோடு வாழவேண்டும்
கலை தவழும் மேடையெலாம் பூமாலை அணிந்து நான்
கௌரவம் காண வேண்டும்
கவிபாடும் எனது குரல் கேட்டவுடன் தெய்வமெல்லாம்
காட்சிதந்து அருள வேண்டும்
நிலையான புகழ்தந்து உற்றாரும் மற்றாரும்
நேசிக்கும் உறவு வேண்டும்
நீஎனது துணையாகி நான் செல்லும் பாதைக்கு
நேர் வழிகள் காட்ட வேண்டும்

வளையாடும் கரத்தழகி பகைவென்று எந்நாளும்
மறுக்காமல் காக்க வருவாய் - அம்மா
வைத்தீஸ்வரன் கோவில்வளர் தையல்நாயகியே
வளம் காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

சிறுவயதில் உன்பெருமை தெரிந்திருந்தாலுன்னைச்
சேவித்து மகிழ்ந்திருப்பேன்
தெரியாமல் செய்தபிழை அத்தனையும் மன்னிக்கத்
தேடிவந் தழுதிருப்பேன்
புரியாமல் எடுத்தப் பிறவிதனில் மங்கையரின்
போகத்தை அளந்திருந்தேன்
பொன்னோடும் பெண்ணோடும் வருமின்பம் போதுமெனப்
புரியாமல் வாழ்ந்திருந்தேன்
திருநாளில் உன்பெருமை தெரிந்ததும் தொடர்ந்து நான்
செவ்வாயில் விரதம் வைத்தேன்
தித்திக்கும் அருள் தன்னை சித்திக்க வரம் வேண்டி
சிங்காரப் பாட்டிசைத்தேன்
பருவத்தில் நான் செய்த பாவத்தை மன்னித்துப்
பாவை நீகாக்கவருவாய் - அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

திருக்கழுக் குன்றத்தில் கழுகுக்கும் மதியத்தில்
தினந்தோறும் சோறு உண்டு
திருநாளாம் பொங்கலில் நந்தியெனும் காளைக்கும்
தித்திக்கும் பொங்கல் உண்டு
வருஷத்தில் ஒரு நாளில் வடையோடு அன்னத்தை
வைரவரும் காண்பதுண்டு
வளர்கின்ற புற்றுக்குள் ஒளிகின்ற பாம்புக்கும்
வார்க்கின்ற பாலுமுண்டு
அர்ச்சித்து வழிபட்டு அன்னையே உனையென்னும்
அடியேனுக் கென்ன உண்டு
அன்று தினம் அளந்தபடி என்றைக்கும் நடந்திடவே
அருள்புரிய வேண்டும் அம்மா
மரம் வைத்த நீதானே தண்ணீரும் விட வேண்டும்
மறந்திடல் முறையாகுமா - அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

கழுதையெனும் பிறவியை எடுத்தாலோ நிச்சயம்
கழுத்திலே பொதியிருக்கும்
காளை மாடகவே பிறந்திடின் நிச்சயம்
கழனியில் கால் இருக்கும்

பழுதான பிறவியாம் நாயகப் பிறந்தாலோ
பகலிரவு விழிக்க வேண்டும்
பறவையாய்ப் பிறந்தாலும் மரங்களின் உச்சியில்
பதியங்கள் போட வேண்டும்
அழுதாலும் தொழுதாலும் அன்னையே உனையன்றி
யாரெனக் குதவுவார்கள்?
ஆறறிவு கொண்டதோர் மனிதனாய் என்னை நீ
அகிலத்தில் படைத்த பின்னால்
வழிகாட்ட மறப்பதும் நியாயமா? என் விழியில்
வழிந்து நீர் ஓடலாமா? அம்மா
வைத்தீஸ்வரன் கோயில் வளர்தையல் நாயகியே
வளம்காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

புல்லாகிப் பூண்டாகி புழுவாகி இருந்தாலோ
புலம்பியே தீரவேண்டும்
பொன்னாக அணிகின்ற மனிதனாய்ப் பிறந்து நான்
புதுயுகம் காண வேண்டும்
கல்லாகி நிற்கின்ற தெய்வம் நீஇல்லையெனக்
காட்டிட விரைந்து வருக
கனதனம் நீதந்து காசினியில் புகழ்தந்து
காவலாய் நின்று அருள்க
முள்ளாக மலராக மோதிடும் வாழ்க்கையில்
முற்றும் நான் நம்பிவந்தே
மோதகப்பிரியனின் தாயான உன்னிடம்
முறையிடு செய்கின்றேன்
பல்லக்குப் பரிவாரம் பார்த்திடும் ராஜாங்க
பவனியை எனக்கு அருள்க - அம்மா
வைத்தீஸ்வரன்கோயில் வளர்தையல் நாயகியே
வளம் காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

எவருக்கு எதுவேண்டும் என்பதை அறிந்து நீ
எறிட்டுப் பார்க்கவில்லை
இருகரம் கூப்பியுன் சந்நதியில் நிற்கும்நான்
எது கேட்டும் மாறவில்லை
சிவல்புரியில் வாழ்கின்ற சிங்காரம் தந்ததோர்
செந்தமிழ் கவிதை மூலம்
சீர்கொண்ட பதிகங்கள் பத்தையும் கேட்டு நீ
சிரமத்தை அகற்ற வேண்டும்
கவலைக்கு மருந்தாகும் கடவுளே உனைநம்பி
காலங்கள் போக்கிவிட்டேன்
காப்பாற்ற வேண்டியது உன்பொறுப் பல்லாது
காசினியில் யார் பொறுப்பு ?

மகன்கேட்டு தாய் எதுவும் மறுப்பதில் முறையில்லை
மனமிரங்கி வந்து அருள்க - அம்மா
வைத்தீஸ்வரன் கோவில் வளர் தையல்நாயகியே
வளம் காண வைக்கும் உமையே! (ஓம் சக்தி)

## அஷ்டலட்சுமி வருகை

கோரஸ்

வருவாயே லெட்சுமியே வந்தருள்வாயே
வாயாரப் பாடுகிறோம் வரமருள்வாயே

எட்டுவகை லெட்சுமியால் ஏராளமான செல்வம்
கொட்டுவகை நானறிந்தேன் கோலமயிலானவளே!
வெற்றியுடன் நான் வாழ வேணும் ஆதி லட்சுமியே!
வட்டமலர் மீதமர்ந்து வருவாய் இதுசமயம் (வருவாயே)

சிந்தனைக்குச் செவிசாய்த்து சீக்கிரம் என் இல்லம்வந்து
உந்தனருள் தந் திருந்தால் உலகமெனைப் பாராட்டும்!
வந்தமர்ந்து உறவாடி வரங்கள்பல தருவதற்கே
சந்தான லட்சுமியே தான் வருவாய் இது சமயம் (வருவாயே)

யானைஇரு புறமும் நிற்கும் ஆரணங்கே உனைத் தொழுதால்
காணுமொறு போகமெல்லாம் காசினியில் கிடைக்குமென்பார்
தேனிருக்கும் கவியுரைத்தேன் தேர்ந்தகஜ லட்சுமியே!
வானிருக்கும் நிலவாகி வருவாய் இது சமயம் (வருவாயே)

அன்றாட வாழ்க்கையினில் அனுபவிக்கும் துன்பமெல்லாம்
உன்றனருள் பெற்றுவிட்டால் ஓடுவதும் உண்மையன்றோ!
இன்றோடு துயர் விலக இனிய தனலட்சுமியே!
மன்றாடிக் கேட்கின்றேன் வருவாய் இது சமயம் (வருவாயே)

எங்கள் பசி தீர்ப்பதற்கு இனியவயல் அத்தனையும்
தங்கநிறக் கதிராகித் தழைத்துச் சிரிப்பவளே!
பங்குபெறும் வாழ்க்கையினைப் பார் தான்ய லட்சுமியே!
மங்கலமாய் என்னில்லம் வருவாய் இது சமயம் (வருவாயே)

கற்றுநான் புகழடைந்து காசினியில் எந்நாளும்
வெற்றியின்மேல் வெற்றிபெற வேணுமென்று கேட்கின்றேன்
பற்றுவைத்தேன் உன்னிடத்தில் பார்விஜயலட்சுமியே
வற்றாத அருட்கடலே வருவாய் இதுசமயம் (வருவாயே)

நெஞ்சிற் கவலையெலாம் நிழல்போல் தொடர்ந்ததனால்
தஞ்சமென உனையடைந்தேன் தாமரைமேல் நிற்பவளே

அஞ்சாது வரம் கொடுக்கும் அழகுமகா லட்சுமியே!
வஞ்சமில்லா தெனக்கருள வருவாய் இதுசமயம் (வருவாயே)

ஏழுவித லெட்சுமிகள் என்னில்லம் வந்தாலும்
சூழுகிற பகையொழிக்கும் தூயவளும் நீதானே!
வாழும் வழிகாட்டிடவே வாவீர லட்சுமியே!
மாலையிட்டுப் போற்றுகின்றேன் வருவாய் இது சமயம் (வருவாயே)

## *கந்தவீர மாகாளி*

கோரஸ்

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி

கந்தவீர மாகாளி கமலமங்கலை
கருணையான வடிவழகி கனிந்து நின்றனை
விந்தையாகி விளக்குமாகி விளங்கி வந்தனை
விண்ணுமாகி மண்ணுமாகி வெற்றி தந்தனை (ஓம் சக்தி)

மந்தமான புத்தியோட்டி மனமும் தந்தனை
மலரின் தேனும் உன்னைப்பாட மயக்கம் தீர்த்தனை
சொந்தமான காளியம்மா இந்தநாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி எங்கும் தங்குவாய் (ஓம் சக்தி)

நந்தவீர மாகாளி நயனமாலினி
நம்பிவந்த எம்மிடையே நலனும் காட்டுவாய்
இந்த வாழ்வில் உன்னையன்றி இங்கு யாருளர்
இன்று நல்ல காலைவந்து இனிமை கூட்டுவாய் (ஓம் சக்தி)

மந்தையாடு போல வாழ்வில் மயங்கி நில்லாமல்
முக்தியோடு செல்வபோகம் முழுதும் காட்டுவாய்
சொந்தமான காளியம்மா இந்தநாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி எங்கும் தங்குவாய் (ஓம் சக்தி)

பொங்குவீர மாகாளி பொய்மை தீர்மணி
பொறுமையோடு பெருமையாகிப் பொருளும் கூட்டினாய்
எந்தையான சிவனைத் தூது எடுத்து அனுப்பினாய்
எழிலியாகி எண்ணமாகி என்னுள் ஆடினாய் (ஓம் சக்தி)

பந்தனைந்த விரலிநீயும் பகைமை என்றதும்
பறந்துவந்து படைகளோட்டிப் பசுமை காட்டினாய்
சொந்தமான காளியம்மா இந்தநாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி எங்கும் தங்குவாய் (ஓம் சக்தி)

விந்தைவீர மாகாளி விரைந்து வந்திடின்
சொந்த நோயும் வந்த நோயும் தொலைவில் ஓடிடும்
எந்த மாயம் எம்மைத்தேடி வந்தபோதிலும்
என்னையீன்ற தாய் நினைப்பில் எரிந்து போய்விடும் (ஓம் சக்தி)

சிந்தை வாழும் உந்தன் மஞ்சள் சிறிது பூசிடின்
கந்தனோடு கரியன் நீலகண்டன் காணலாம்
சொந்தமான காளியம்மா இந்தநாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி எங்கும் தங்குவாய் (ஓம் சக்தி)

## இராஜேஸ்வரி அம்மா பரமேஸ்வரி

கோரஸ்

இராஜேஸ்வரி அம்மா பரமேஸ்வரி
புவனேஸ்வரி அம்மா ஜெகதீஸ்வரி

ஸ்ரீசக்ர வடிவத்தில் ராஜேஸ்வரி
சிவசக்தி ரூபத்தில் பரமேஸ்வரி
ஓம்சக்தி ஓம்சக்தி ராஜேஸ்வரி
உலகாளும் மாசக்தி பரமேஸ்வரி (இராஜ)

அருளாளர் நெஞ்சங்கள் சிம்மாசனம்
அறுபத்து நான்குகலை வெண்சாமரம்
ஒருநான்கு வேதங்கள் சங்கீர்தனம்
ஓங்கார நாதமம்மா உன் தாண்டவம் (இராஜ)

பூவுக்கும் பொட்டுக்கும் துணையானவள்
பொன்மஞ்சள் குங்குமத்தில் நிலையானவள்
சேவிக்கும் பெண்களுக்குத் தாயானவள்
திருமாங்கல்யம் என்னும் வாழ்வானவள் (இராஜ)

குளம்போல நெய்யூற்றி விளக்கேற்றுவோம்
குடும்பத்தின் பிம்பத்தில் குடியேற்றுவோம்
வளம்யாவும் தரவேண்டி மலர்தூவுவோம்
மகராணி நீஎன்று கவிபாடுவோம் (இராஜ)

தீபத்தில் குடிகொண்ட ராஜேஸ்வரி
திலகத்தில் முகம்காட்டும் ஜெகதீஸ்வரி
ஆபத்தில் ஓடிவரும் ராஜேஸ்வரி
அருள்செய்ய வேணுமம்மா நீயேகதி (இராஜ)

ஸ்ரீசக்ர வாசினி சிம்மாசனி
சிவசக்தி ரூபினி கல்யாணிநீ
ஓம்சக்தி ஸ்ரீராஜ ராஜேஸ்வரி
உன்பாதம் சரணடைந்தேன் மகேஸ்வரி! (இராஜ)

இருகைகளால் தொடுத்த பூமாலைகள்
இதயத்தினால் தொடுத்த பாமாலைகள்
அருள்பொங்கும் தீபங்கள் ஏற்பாயம்மா
அடியேனை எந்நாளும் காப்பாயம்மா! (இராஜ)

அம்மா என் இல்லத்தில் அடியெடுத்துவா
அழகான வெண்கொற்றை குடைபிடித்துவா
சும்மாநீவரலாமா பகை முடித்துவா
துயரங்கள் யாவினுக்கும் விடைகொடுத்துவா! (இராஜ)

செந்தா மரைப்பூவில் ஸ்ரீதேவியாம்
சிங்கத்தில் ஏறிவந்தால் மாகாளியாம்
வெண்தா மரைப் பூவில் மகாராணியாம்
விண்ணோடும் மண்ணாளும் கலைவாணியாம்! (இராஜ)

தீர்த்தங்கள் அத்தனையும் கமலாலயம்
தீபம் தெரிந்த இடம் அருணாசலம்
வாய்த்த சபைகள் எல்லாம் பொன்னம்பலம்
மாதா பராசக்தி நீ என்பலம்! (இராஜ)

தாய் நீமனம் வைத்தால் தங்கம் வரும்
தனி வழிக்குத் துணையாகச் சிங்கம் வரும்
சேய் வீட்டில் கல்யாண மேளம் வரும்
திருநாட்டை அரசாளும் யோகம் வரும்! (இராஜ)

## *மலையனூர் அங்காளி!*

மஞ்சலிலே நீராடி குங்குமத்தால் பொட்டு இட்டு
பூவாடை காரியம்மா நீமருள் ஆடி வந்திடம்மா
உடுக்கை பம்பை முரசொலிக்க உருமி மேளம் தான் ஒளிக்க
சித்தாங்கு ஆடை கட்டி தாயே நீ சீறி எழுந்திடம்மா
மேல்மலையனூரில் கோயில் கொண்ட என் அங்காள ஈஸ்வரியே
ஆத்தாளே அழைக்கின்றேன் ஆடி நீ இங்கு வந்திடம்மா
(மேல்மலையனூரு)
மேல்மலையனூரு அங்காளியே ஆத்தாடி திரிசூலியே
குறிசொல்ல வாடியம்மா எங்கள் குலம் காக்கும் தேவியம்மா
சித்தாங்கு ஆடை கட்டி நீசிங்க ரதம் மீது ஏறி
தேரோடும் வீதியிலே தாயே நீ ஆடி வந்திடம்மா
அந்தரியே சுந்தரியே எங்கள் அங்காள ஈஸ்வரியே
ஆடிவரும் தேரினிலே நீ அழகாக வருபவளே
(மேல்மலையனூரு)
ஆலய வாசலிலே.. அலங்கார தோரணமாம் என்
அங்காள ஈஸ்வரிக்கு அபிஷேக பூஜைகளாம்

ஆடிவரும் தேரினிலே நீஅசைந்து வரும் மாரியம்மா
ஆயிரம் கண்கள் உடையவளே என் அங்காள தேவியம்மா
திருவிளக்கின் ஒளியினிலே நீ திருவாக்கு சொல்லிடம்மா
மாவிளக்கின் ஒளியினிலே நீ மத்த குறி சொல்லிடம்மா
மாங்கல்யம் காத்திடம்மா எங்கள் மக்கள் குறை தீர்த்திடம்மா
மலையனூரு அங்காளியே நீ மருளாடி வந்திடம்மா
(மேல்மலையனூரு)

## அம்மா அம்மா தாயே

அம்மா அம்மா தாயே அகிலாண்டேஸ்வரி நீயே அன்னபூரணி
நீதாயே ஓம் ஆதிபரா சக்தி நீயே

(அம்மா)

காஞ்சியில் காமாட்சி நீயே காசி விசாலாட்சி தாயே
கருணை செய்வாய் அம்மா நீயே- ஓம் கருமாரி தங்கத்தாயே

(அம்மா)

கடம்பவனத்தின் மீனாட்சி கயற்கண்ணி உந்தன் ஆட்சி
கனிந்த முகம் திருக்காட்சி - ஓம் காண்பவர் அகமுக மகிழ்ச்சி

(அம்மா)

கருமாரி மகமாயி கருணை பொழி உருமாரி
பருவதனின் அன்புக்காரி - ஓம் உருகுகின்றோம் அர்தநாரி

(அம்மா)

மாதவனின் தங்கை நீயே மாங்காடு உறைந்தாயே
மகாதேவன் பாரியும் நீயே - ஓம் மகா கணபதி உன் சேயே

(அம்மா)

மேல் மருவத்தூர் தாயே மேஷ வனம் தருவாயே
மேருகிரி இல்லத் தாயே - ஓம் மேதினி காத்திடுவாயே

(அம்மா)

ஆதி பரஞ்சுடர் நீயே ஆங்காரி ஒங்காரி தாயே
ஆதரிப்பாய் அம்மா நீயே - ஓம் ஆறுமுகன் உந்தன் சேயே

(அம்மா)

அருளும் பொருள் தருவாயே இந்த அடியவர் பாடலை தாயே
அகங்குளிர கேட்டு நீயே - ஓம் ஆண்டருள் புரிவாய் தாயே

(அம்மா)

## பராசக்தி மகிமை

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் - பராசக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

1. கணபதிராயன் - அவனிரு
கலைப்பிடித்திடுவோம்
நம் செயல் நிறைந்திடவே - யாத்திரை
கூடி மகிழ்ந்திடவே (ஓம் சக்தி)

2. சொல்லுக் கடங்கிடுமோ - பராசக்தி
சூரத்தனங்க ளெல்லாம்
வல்லமை தந்திடுவாள் - பராசக்தி
வாழி என்றே துதிப்போம். (ஓம் சக்தி)

3. வெற்றி வடி வேலன் - அவனுடை
வீரத்தினைப் புகழ்வோம்
சுற்றி நில்லாதே போ பகையே
துள்ளி வருகுது வேல் (ஓம் சக்தி)

4. தாமரைப் பூவினிலே - சுருதியைத்
தனியிருந்துரைப்பாள்
பூமணித் தாளினையே - கண்ணிலொற்றிப்
புண்ணியம் எய்திடுவோம் (ஓம் சக்தி)

5. பாம்புத் தலை மேலே - நடம் செய்யும்
பாதத்தினைப் புகழ்வோம்
மாம்பழ வாயினிலே - குழலிசை
வண்மை புகழ்ந்திடுவோம் (ஓம் சக்தி)

6. செல்வத் திருமகளைத் திடம் கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வம் எல்லாம் தருவாள் - நமதொளி
திக்கனைத்தும் பரவும் (ஓம் சக்தி)

## சமய புரத்தாலே மாரியம்மா

சமயபுரத்தாலே மாரியம்மா - அம்மா
சங்கரியே எங்கள் முன்னே வாருமம்மா
துள்ளியே எங்கள் முன்னே வாருமம்மா - அம்மா
தூயவளே என் தாயே மாரியம்மா - அம்மா (சமய)

மல்லிகை சரம் தொடுத்து மாலையிட்டோம் - அரிசி
மாவிளக்கு ஏற்றிவைத்து பொங்கலுமிட்டோம்
துள்ளியே எங்கள் முன்னே வாருமம்மா - அம்மா
தூயவளே என் தாயே மாரியம்மா (சமய)

பட்டுப் பீதாம்பரத்தில் தாவணியும் - உனக்கு
பாவாடை சேலைகளும் கொண்டு வந்தோம்
எட்டுத் திசைகளையும் ஆள்பவளே - அம்மா
ஈஸ்வரியே என் தாயே மாரியம்மா - அம்மா (சமய)

கத்திக் கதறுகிறோம் கேட்கலியோ - அம்மா
கல்லோ தான் உன் மனமும் கரையலியோ
உலகமே ஆடுதம்மா உன் சிரிப்பலே - அம்மா
உமையவளே என் தாயே மாரியம்மா - அம்மா (சமய)

காலில் சலங்கை ஒலி காதைத் துளைக்குதம்மா
பாவாடை தாவணியும் தானாக ஆடுதம்மா
பூவாடை வீசுதம்மா பூமகளே - உனக்கு
பாமாலை பாடவந்தோம் பார்மகளே - அம்மா (சமய)

## எங்களுக்கும் குறைகள் உண்டு

எங்களுக்கும் குறைகளுண்டு அதனை நான் அழுது சொல்லலாமா
என் தாயும் நீயிருக்க உந்தன் செல்ல மகன் வாடலாமா (2 முறை)

காளி மகமாயி கருமாரி அபிராமி என பாடியது கேட்கவில்லையா
செல்வங்களும் நட்புகளும் வந்து விழும் மனந்தனில் நிம்மதியும்
தேவையில்லையா தாயே நிம்மதியும் தேவையில்லையா (எங்களுக்கும்)

ஆறுதலாய் யாருமில்லை ஆசைவைக்கும் எண்ணமில்லை
ஆணவத்தில் ஆடிவரும் ஜீவனுமில்லை
சொந்த பந்தம் யாருமில்லை சூழும் ஜனம் நல்லதில்லை
உன்னையன்றி இவ்வுலகில் நல்லதொரு தெய்வமில்லை
தடுமாறி திருக்கோவில் வந்தேனம்மா......

அம்மா ஜெகதீஸ்வரி... உந்தன் குழந்தை எனை ஆதரி
நீவந்து தாயாக எனை தாங்கணும் உன்
மடிமீது தலை வைத்து நான் ஏங்கணும்
சலனங்கள் இல்லாமல் மனம் தூங்கணும் மனம் தூங்கணும்
(எங்களுக்கு)

வெண்சங்கு நாதமழை மங்கல மணியோசை
வெள்ளியங்கிரி முழுதும் உன் ஆட்சியே
முத்துமணி பாதங்களில் இரத்தின சலங்கையொலி
மொத்தமாய் உனதழகை சொல்லிவிட ஏது மொழி
உனைபாடும் நாளெல்லாம் திருநாளம்மா
எனையாளும் தில்லைகாளி அம்மா உலகாளும் திருசூலி நீ (2 முறை)

சிவனோட நீதோற்ற கதையும் பொய்யே
சிவனாட்டம் தனில் உள்ள சக்தியும் நீ
மனமுவந்து அருள்வாயே தில்லைகாளியே
தில்லைகாளியே.... தில்லைகாளியே
(எங்களுக்கு)

## சிவன்

காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக்குய்ப்பது
வேதம் நான்கிலும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நவச்சிவாயமே!
(சம்பந்தர்)

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நிழலே (திருநாவுக்கரசர்)

# ஸ்ரீ நடராஜர் பதிகம்

கோரஸ்

ஓம் நமச்சிவாய ஓம், ஓம் நமச்சிவாய
ஓம் நமச்சிவாய ஓம், ஓம் நம்சிவாய

அங்கும் இங்கும் எங்குமாய் அமைந் தேவத தேவனே!
ஆதியாய் அநாதியாய்ச் சமைந்தஜோதி ரூபனே!
மங்கலங்கள் யாவும் நல்கும் அம்பிகை மணாளனே!
மைந்தன் செய்யும் பூஜையில் மகிழ்ந்தருள் நடேசனே!
(ஓம் நமச்சிவாய)

எந்த இல்லம் ஆயினும் இருந்த இல் சிதம்பரம் :
எடுத்தபீடம் ஆலயம் : தொடுத்தகூரை கோபுரம் :
செந்தமிழ்ச் சொல் மந்திரம் : திருந்தும் அன்பே ஆகமம் :
சிவந்தபாத பங்கயம் : உவந்தருள் நடேசனே! (ஓம் நமச்சிவாய)

மன்றிலே எடுத்தகால் என் மனையிலும் எடுத்துவை :
மனதிலே நினைத்த நன்மை விரைவிலே முடித்துவை :
என்றும் தீமை அணுகிடாமல் ஈசனே, தடுத்துவை :
ஏத்தும் அன்பர் குழுவில் என்னை சேர்த்துவை நடேசனே!
(ஓம் நமச்சிவாய)

ஆ-பயந்த ஐந்திேனோடுபால், பழம், பஞ்சாமிர்தம் :
ஆலைவாய்க் கரும்பு, தெங்கு தேன், சுகந்த சந்தனம்
நீ- பயந்த யாவையும் நினைக்களித்தேன் ஈசனே!
நேர்த்தியாய் அனைத்தும் ஆடிவாழ்த்துவாய் நடேசனே!
(ஓம் நமச்சிவாய)

அட்டநாக பூஷணம் அளிக்கவல்லன் அல்லனே!
ஆனை, மான், சிறுத்தை வேட்டை ஆடவல்லன் அல்லனே!
இட்டமாலை ஆடையோடு தொட்டுவைத்த சந்தனம்
என்றும்நல்க வல்லன் வல்லன் கொண்டருள் நடேசனே!
(ஓம் நமச்சிவாய)

வில்லினால் அடிக்கவோ? வீசுகல் பொறுக்கவோ ?
மிதித்தபோதுகை, பிரம்பை மேலும் நான் எடுக்கவோ ?
நல்லபிள்ளை என்னை ஆளும் நாதனும் நீஅல்லவோ ?
நாளும் நான் படைத்தசொல்லும் பூவும் கொள் நடேசனே ?
(ஓம் நமச்சிவாய)

ஆட நீஎடுத்ததாய் அறிந்தவர் இயம்புவார்
அல்ல அல்ல என்தலைமேல் சூட என்று சொல்கிறேன்!
ஈடில்லாத தெய்வம், நீஇடப்புறம் எடுத்தகால்
எந்த நோக்கில் என்று சொல்ல வந்தருள் நடேசனே!
(ஓம் நமச்சிவாய)

மழுவெடுத்து எதைவிளக்க மன்றுதோறும் ஓடினாய் ?
மதியெடுத்த சிரம் இருக்க மத்தனாய ஏன் ஆடினாய் ?

கழுதடுத்து நடனம் ஆடும் காட்டில் என்ன தேடினாய் ?
கையில்நான் எடுத்ததூபம் கொள்ளுவாய் நடேசனே!

(ஓம் நமச்சிவாய)

எடுத்த தூபம் ஆதியாவும் ஏற்றருள் மகேசனே!
இன்றுநான் படைத்தயாவும் உண்ணுவாய் சபேசனே!
தடுத்தபண்டை வினையகற்றி தாங்குவாய் சர்வேசனே!
சரணம் உன்னை அன்றிஏது தாங்குவாய் நடேசனே!

(ஓம் நமச்சிவாய)

வாழி நீபடைக்கும் தெய்வம் மலர் அணை அமர்ந்ததாம்!
வகுத்தளிக்கும் தெய்வம்கூட அரவணை கிடந்ததாம்!
ஊழிதோறும் ஐந்தொழில் உவந்துசெய்யும் ஈசனே!
ஓய்ந்துசற்றென் நெஞ்சணைக்கண் சாய்ந்துகொள் நடேசனே!

(ஓம் நமச்சிவாய)

ஓம் நமச்சிவாய ஓம் சிவாயநம: ரூபனே!
ஓதும்ஐந்து சபையில் ஆடும்பதனே! சங்கீதனே!
சுவாமியாய்த் தழைத்தசிவ காமிகாதல் நேசனே!
மாறிலாத கருணைநீவழங்குவாய் நடேசனே!

(ஓம் நமச்சிவாய)

## *ஸ்ரீ வைத்தியநாதர் பதிகம்*

ஓம் நமசிவாய ஓம் ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய ஓம் ஓம் நமசிவாய

உன்னையன்றி வேறு தெய்வம் உள்ளம் எண்ண வில்லையே
ஓசைகொண்ட தமிழினாலே பாடுவேன் உன் பிள்ளையே
அன்னை, பிள்ளை மழலையில் அகம் குழைதல் போலவே
அணிய வேண்டும் எனது சொல்லும் ஆதிவைத்யநாதனே

ஓம் நமசிவாய :

தேசமெங்கும் கோயில்கள் திறந்து வைத்த வாயில்கள்
தேடும் அன்பர் யார்க்கும் இன்பம் கோடி நல்கும் மூர்த்திகள்
பூஜை கொள்ளும் தேவர்கள் யாவையும் நின் கோலமே
போற்றும் என்னை வாழ்விலேமுன் னேற்று வைத்யநாதனே

ஓம் நமசிவாய :

ஓதும் நான்கு வேதமும், உலவு திங்கள், ஞாயிறும் ,
உகந்த கந்தவேல்,ஜடாயு, உண்மை அன்பின் ராமனும்,
பாத பூஜை செய்யவே பலன் கொடுத்த தேவனே
பாதி கொண்ட தையலோடு வாழி வைத்யநாதனே ஓம் நமசிவாய :

ஆலகால நஞ்சை நீ அமிர்தமாய் அருந்தினாய்
அடித்து வந்த பன்றியின் இறைச்சியும் விரும்பினாய்
பாலன் நஞ்சு தேடவோ பன்றி வேட்டை ஆடவோ
படைத்த பா சுவைத்தருள் பரவும் வைத்யநாதனே ஓம் நமசிவாய :

வாத, பித்த சிலேட்டுமம் வகைக்கு நூறு நோய்க்குலம்
மனிதராசி அறிகிலாத புதியநோய் தினம் தினம்
வேதனை வளர்ந்தன்றி வென்றதோ மருத்துவம்
மேலும் என்ன கூறுவேன் கண் பாரும் வைத்ய நாதனே

ஓம் நமசிவாய :

ஆயுர்வேதம், ஆங்கிலம் அமைந்த சித்த வைத்தியம்
ஆன வேறு வகையிலும் அனேக மான பத்தியம்
பாழும் நோயும் போனதோ பலித்து நன்மை ஆனதோ
பாவியேனைக் கூட்டத்தோடு பாரும் வைத்ய நாதனே ஓம் நமசிவாய :

அங்குமிங்கும் ஒடி என்ன? அகலவில்லை நோய்களே
ஆடி என்ன ? பாடி என்ன ? விலகவில்லை பேய்களே
மங்கை பாகன் நீயிருக்க எங்கு செல்வோம் சேய்களே
மணமிரங்கி அருள் வழங்கு வாழி வைத்ய நாதனே ஓம் நமசிவாய :

கண்ணில்லாத குருட ருக்கும் கண் கொடுக்கும் ஈசனே
கால் இல்லாத முடவருக்கும் கால் கொடுக்கம் போஜனே
எண்ணிலாத நோயின் கூட்டம் இடமிலாமல் ஓடவே
என்னுளே எழுந்தருள் வாய் அண்ணல் வைத்ய நாதனே

ஓம் நமசிவாய :

சிந்தையில் இருந்த நோய் செயல்களால் விளைந்த நோய்
திசுக்கள், தோல், நரம்பெலும்பு குருதியில் செறிந்த நோய்
எந்த நோயும் போக்குவாய் எதிர் வராமல் ஆக்குவாய்
இசைந்த கந்த புரியிலே அமர்ந்த வைத்ய நாதனே

ஓம் நமசிவாய :

நாம, ரூப பேதமற்ற ஞான ஜோதி மூர்த்தியே
நாளும் உன்னை அன்பு செய்து பாடுகின்றேன் வாழ்த்தியே
சாமவேத கீதனே சடாயு போற்றும் பாதனே
தஞ்சம், தஞ்சம் தஞ்சம் என்னைத் தாங்கு வைத்ய நாதனே

ஓம் நமசிவாய :

## சிவ வாக்ய பாடல்

ஓம் நம சிவாய ஓம் ஓம் நம சிவாய
ஓம் நம சிவாய ஓம் ஓம் நம சிவாய

ஓடிஓடி ஓடிஓடி உட்கலந்த ஜோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களும் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்காள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே (ஓம்)

என்னிலே இருந்தஒன்றை யான் அறிந்ததில்லையே
என்னிலே இருந்தஒன்றை யான் அறிந்துகொண்டபின்
என்னிலே இருந்தஒன்றை யாவர் காணவல்லரோ
என்னிலே இருந்திருந்து யான் உணர்ந்து கொண்டேனே (ஓம்)

நானதேது தீயதேது நடுவில் நின்றதேதடா
கோனதேது குருவதேது கூறிடும் குலாமரே
ஆனதேது அழிவதேது அப்புறத்தில் அப்புறம்
ஈனதேது ராமராம ராமஎன்ற நாமமே (ஓம்)

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை ஒதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்திலோர் எழுத்தை அறிந்துகூற வல்லீரேல்
அஞ்சேல்அஞ்சேல் என்றுநாதன் அம்பலத்தில் ஆடுமே (ஓம்)

இடதுகண்கள் சந்திரன் வலதுகண்கள் சூரியன்
இடக்கைசங்கு சக்கரம் வலக்கை சூலமான மழு
எடுத்தபாத நீள்முடி எண்திசைக்கும் அப்புறம்
உடல்கலந்துநின்ற மாயம் யாவர் காண வல்லரோ (ஓம்)

உருவுமல்ல வெளியுமல்ல ஒன்றைமேவி நின்றதல்ல
மருவுமல்ல காதமல்ல மற்றதல்ல அற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல போகும்ஆவி தானுமல்ல
அரியதாகி நின்றநேர்மை யாவர்காண வல்லரோ (ஓம்)

மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத்து அடுக்குவார்
வெண்கலம் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணுவார்
நம்கலம் கவிழ்தபோது நாறுமென்று போடுவார்
என்கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே (ஓம்)

ஆனவஞ்செழுத்துளே அண்டமும் அகண்டமும்
ஆனவஞ்செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனவஞ்செழுத்துளே அகாரமும் மகாரமும்
ஆனவஞ்செழுத்துளே அடங்கலாவ லுற்றதே (ஓம்)

நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்ற மாய்கை மாய்கையை
அனைத்துமாம் அகண்டமாம் அனாதியாய் அனாதியாய்
எனக்குள் நீஉனக்குள் நான் இருக்குமாறு எங்ஙனே (ஓம்)

பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை
பாரிலே செபித்து விட்ட மந்திரங்கள் எத்தனை
மிண்டராய்த் திரிந்த போது இறைத்த நீர்கள் எத்தனை
மீளவும் சிவலாயங்கள் சுழ வந்தது எத்தனை (ஓம்)

அம்பலத்தை அம்பு கொண்டு அசங்கென்றால் அசங்குமோ
கம்பற்ற பாற்கடல் கலங்கு என்றால் கலங்குமோ
இன்பமற்ற யோகியே இருளும் வந்து அணுகுமோ
செம்பொன்னம் பலத்துளே தெளிந்ததே சிவாயமே (ஓம்)

அவ்வெனும் எழுத்தினால் அகண்டம் ஏழும் ஆகினாய்
உவ்வெனும் எழுத்தினால் உருத்தரித்து நின்றனை
மவ்வெனும் எழுத்தினால் மயங்கினார்கள் வையகம்
அவ்வும் உவ்வும் மவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே (ஓம்)

மூன்று மண்டலத்திலும் முட்டி நின்ற தூணிலும்
நான்ற பாம்பின் வாயிலும் நவின்றெழுத்த அட்சரம்
ஈன்ற தாயும் அப்பரும் எடுத்துரைத்த மந்திரம்
தோன்றுமோர் எழுத்துளே சொல்ல வெங்குதில்லையே (ஓம்)

நமசிவாய மஞ்செழுத்தும் நிற்குமே நிலைகளும்
நமசிவாய மஞ்செழுத்தும் புராணமான மாய்கையை
நமசிவாய மஞ்செழுத்தும் நம்முள்ளே இருக்கவே
நமசிவாய உண்மையை நன்குரை செய்நாதனே (ஓம்)

இல்லை இல்லை இல்லைஎன்று இயம்புகின்ற ஏழைகாள்
இல்லையென்று நின்ற ஒன்றை இல்லை என்னலாகுமோ
இல்லையல்ல என்றுமல்ல இரண்டும் ஒன்றி நின்றதை
எல்லை கண்டு கொண்டோர் இனி பிறப்பதிங்கில்லையே (ஓம்)

காரகார காரகார காவல் ஊழி காவலன்
போரபோர போரபோர போரில் நின்ற புண்ணியன்
மாரமார மாரமார மரங்கள் ஏழும் எய்த
ராமராம ராமராம ராம என்னும் நாமமே (ஓம்)

விண்ணிலுள்ள தேவர்கள் அறியொணாத மெய்பொருள்
கண்ணில் ஆணியாகவே கலந்து நின்ற எம்பிரான்
மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்
அண்ணலாரும் எம்முள்ளே அமர்ந்து வாழ்வதுண்ணையே (ஓம்)

அகாரமான தம்பலம் அனாதியான தம்பலம்
மகாரமான தம்பலம் உண்மையான தம்பலம்
மகாரமான தம்பலம் வடிவமான தம்பலம்
சிகாரமான தம்பலம் தெளிந்ததே சிவாயமே (ஓம்)

உண்மையான மந்திரம் ஒளியிலே இருந்திடும்
நன்மைமயான மந்திரம் சமைந்த ரூபமாகிய
வெண்மையான மந்திரம் விளைந்து நீரானதே
உண்மையான மந்திரம் தோன்றுமே சிவாயமே (ஓம்)

ஓம் நம சிவாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்
ஓம் நம சிவாயமே உணர்ந்து மெய் தெளிந்தபின்
ஓம் நம சிவாயமே உணர்ந்து மெய் உணர்ந்தபின்
ஓம் நம சிவாயமே உட்கலந்து நிற்குமே (ஓம்)

## ஆடுக நடனம் ஆடுகவே

ஆடுக நடனம் ஆடுகவே அரஹர சிவனே ஆடுகவே
ஆடுக நடனம் ஆடுகவே அரஹர சிவனே ஆடுகவே (ஆடுக)

சிவகை லாசா பரமேசா திரிபுரம் எறிந்த நடராசா
பவபயம் போக்கும் பரமேசா பழனியை ஆளும் சர்வேசா
(ஆடுக)

அறுகொடு தும்பை மலராட அணிமணி மாலைகள் தானாட
பெருகிடும் கங்கை தலையாட பிறைமதி யதுவும் உடனாட
(ஆடுக)

சூலம் உடுக்கை சுழன்றாட சூழும் கணங்கள் உடனாட
ஆலம் குடித்தோன் ஆடுகவே அடியார் மகிழ ஆடுகவே (ஆடுக)

திருக்கடையூரின் கடயீசா தில்லையாம் பதியில் நடராஜா
திருமுல்லை மாசில்லா மணியீசா திருநடனம் நீ ஆடுகவே
(ஆடுக)

மயிலைக் கபாலி ஈஸ்வரனே மதுரையில் ஆடிய ஆட்டமென்ன
கயிலையில் ஆடிய ஆட்டமென்ன கால்மாறி ஆடிய நடராஜா
(ஆடுக)

# பெருமாள் பாடல்கள்

## ஆதிசேசா அனந்த சயனா

கோரஸ் :

ஆதிசேசா அனந்த சயனா
சீனிவாசா ஸ்ரீ வெங்கடேசா

வைகுண்ட நாதா வைதேகிப்ரியா
ஏழுமலை வாசா எங்களின் நேசா (ஆதி)

வேணுவிலோலனா விஜயகோபாலா
நீலமேக வண்ணா கார் மேக கண்ணா (ஆதி)

காளிங்க நர்த்தனா கமலிய கிருஷ்ணா
கோமள வாயனா குருவாயூரப்பனா (ஆதி)

ஸ்ரீ ராம சந்திர மூமுர்த்தியைப் பாடு
தீவினை யகல அவன் திருவடி தேடு (ஆதி)

பாவங்கள் போக்க பஜனைகள் செய்வோம்
பார்த்த சாரதியின் பாதம் பணிவோம் (ஆதி)

திருப்பதி மலையில் திருமுகம் காட்டும்
திருவேங்கடத்தான் திருவருள் பெறுவோம் (ஆதி)

ஸ்ரீ ரெங்கநாதன் பள்ளி கொண்டிருக்கும்
ஸ்ரீ ரெங்கம் சென்று அவன் திருவடி பணிவோம் (ஆதி)

## விஷ்ணு துதி
## ஸ்ரீ ராம ஜெயம்

கோரஸ் :

ராம ராம ராம ஜெய ஜெய ராம ராம ராம்
ராம ராம ராம சீத்தா ராம ராம ராம்

ராமஜெயம் ஸ்ரீ ராம ஜெயம்
ராமஜெயம் நம் தேக பலம்
ராம ஜெயம் ஸ்ரீ ராம ஜெயம்
ராம ஜெயம் நம் ஜீவரசம்

ஓதியநாவில், உணர்ந்தவர் நெஞ்சில்
உலவிடும் ராமஜெயம்!
உள்ளம் நினைந்ததை அள்ளி வழங்கி
உயர்த்திடும் ராமஜெயம்
சீதை இலக்குவன், மாருதி வீடணன்
சீர் பெற்ற ராமஜெயம்!
சித்தி தரும்பதம் சக்திமயம் : சிவம்
சீதா ராமஜெயம் ஜெய ஜெய
சீதா ராம ஜெயம் (ராமஜெயம்)

ஆழநெடுங்கடல் சேதுவிலே அணை
ஆக்கிய ராம ஜெயம்
ஆங்கொரு கல்லிடைப் பூங்கொடி தோன்ற
அருள் தரும் ராமஜெயம்
தேடி அடைந்தவன் வாலில் நெருப்பும்
சிலிரென்று ராமஜெயம்!
சித்திதரும் பதம் சக்திமயம்: சிவம்
சீதா ராமஜெயம் ஜெய ஜெய
சீதா ராமஜெயம் (ராமஜெயம்)

தாயிற்சிறந்த சபரியை வாழ்வித்த
தாரகம் ராமஜெயம்!
தந்தையின் மேம்பட்ட விந்தைச் சடாயுவின்
தத்துவம் ராமஜெயம்!
சேயெனும் அங்கதன், நேயன் சுமத்திரன்
ஜீவிதம் ராமஜெயம்
சித்தி தரும்பதம் சக்திமயம்; சிவம்
சீதா ராமஜெயம் ஜெய ஜெய
சீதா ராமஜெயம். (ராமஜெயம்)

காலன் நமை அணுகாமல் அரண்செய்து
காத்திடும் ராமஜெயம்!

காசிதலத்தில் விஸ்வேசனும் ஓதிக்
களித்திடும் ராமஜெயம்!
சீலக் கலைகளில், நாலுமறைகளில்
தித்திக்கும் ராமஜெயம்!
சித்தி தரும்பதம்: சக்தி மயம் : சிவம்
சீதாராமஜெயம் ஜெய ஜெய
சீதா ராமஜெயம் (ராமஜெயம்)

பாதம் தொடங்கி நம் கேசம்வரைப் பரி
பாலிக்கும் ராமஜெயம்!
பக்குவமாய் எட்டுத்திக்கிலும் காவல்
படைத்திடும் ராமஜெயம்!
தீது புகாமல், ஓர் சேதம் வராமல்
ஜெயம் தரும் ராமஜெயம்!
சித்தி தரும்பதம் சக்திமயம் சிவம்
சீதா ராமஜெயம் ஜெய ஜெய
சீதா ராமஜெயம் (ராமஜெயம்)

## கோவிந்தம் போடுவோம்

கோவிந்தம் போடுவோம் எல்லோரும்
கோவிந்தம் போடுவோம்
கோவில் முன்னே கூடி நின்று
கோவிந்தம் போடுவோம்

ஏழுமலை வாசனுக்கு கோவிந்தம் போடுவோம்
ஏழை பங்காளனுக்கு கோவிந்தம் போடுவோம் (கோவிந்தம்)

வெங்கட ரமணனுக்கு கோவிந்தம் போடுவோம்
சங்கட ஹரனனுக்கு கோவிந்தம் போடுவோம் (கோவிந்தம்)

புரட்டாசி சனிக்கிழமையில் கோவிந்தம் போடுவோம்
புரட்டாசி வருகிற புரட்டாசி வரப்போகும் புரட்டாசி
சனி கிழமையில் கோவிந்தம் போடுவோம்
புண்டரீக வரதனுக்கு கோவிந்தம் போடுவோம்

கோவிந்தம் கோவிந்தம் கோவிந்தம் கோவிந்தம்
கோவிந்தம் போடுவோம்
அசலோடு வட்டியும் சேர்த்து கோவிந்தம் போடுவோம் (கோவிந்தம்)

வெங்கடரமணா கோவிந்தா
சீத்தாராமா கோவிந்தா
ராதா கிருஷ்ணா (கோவிந்தம்)

## ஐயப்பன் பாடல்

## இருமுடி தாங்கி

இருமுடி தாங்கி ஒரு மனதாகி
குருவுடனே வந்தோம்
இருவினை தீர்க்கும் எமனையும் வெல்லும்
திருவடியைக் காண வந்தோம்!

### சரணம்

பள்ளிக்கட்டு சபரிமலைக்கு
கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை
ஸ்வாமியே ஐயப்போ
ஐயப்போ ஸ்வாமியே!

### பாடல்

நெய்யபஷேகம் ஸ்வாமிக்கே கற்பூரதீபம் சுவாமிக்கே
ஐயப்பமார்களும் கூடுக்கொண்டு ஐயனை நாடிச் சென்றிடுவார்
சபரி மலைக்கு சென்றிடுவார் (சுவாமியே)

கார்த்திகை மாதம் மாலையணிந்து
நேர்த்தியாகவே விரதமிருந்து
பார்த்த சாரதியின் மைந்தனே - உனைப்
பார்க்க வேண்டியே தவமிருந்து (2)

இருமுடி எடுத்து எருமேலி வந்து
ஒருமனதாகிப் பேட்டை துள்ளி
அருமை நண்பராம் வாவரைத் தொழுது
ஐயனின் அருள்மலை ஏறிடுவார் (சுவாமியே)

அழுதை ஏற்றம் ஏறும் போது
அரிகரன் மகனைத் துதித்துச் செல்வார்
வழிகாட்டிடவே வந்திடுவார் - ஐயன்

வன்புலி ஏறி வந்திடுவார்!
கரிமலை ஏற்றம் கடினம் கடினம்
கருணைக் கடலும் துணை வருவார்
கரிமலை இறக்கம் வந்த உடனே
பெருந்தி பம்பையைக் கண்டிடுவார் (சுவாமியே)

கங்கை நதிபோல் புண்ணிய நதியாம்
பம்பையில் நீராடி
சங்கரன் மகனைக் கும்பிடுவார்
சங்கடம் இன்றி ஏறிடுவார்
நீலிமலை ஏற்றம் சிவபாலனும் ஏற்றிடுவார்
காலமெல்லாம் நமக்கை - அருட்காவனாய் இருப்பார்
(சுவாமியே)

தேக பலம் தா - பாத பலம் தா
தேக பலம் தா - பாத பலம் தா
தேக பலம் தா என்றால் அவரும்
தேகத்தைத் தந்திடுவார்
பாத பலம் தா என்றால் அவரும்
பாதத்தைத் தந்திடுவார் - நல்ல
பாதையை காட்டிடுவார் (சுவாமியே)

சபரி பீடமே வந்திடுவார் சபரி அன்னையை பணிந்திடுவார்!
சரங்குத்தி ஆலில் கன்னிமார்களும்
சரத்தினைப் போட்டு வணங்கிடுவார்
சபரிமலைதனை நெருங்கிடுவார்

பதினெட்டுப் படி மீது ஏறிடுவார்;
கதியென்று அவனைச் சரணடைவார்
மதிமுகமும் கண்டே மயங்கிடுவார் - ஐயனைத்
துதிக்கையிலே தன்னையே மறந்திடுவார் (பள்ளிக்கட்டு)

## அற்புத திருப்புகழ் பாமாலை
## விநாயகர் அருள் பெற

பக்கரைவி சித்ரமணி பொற்கலனை யிட்டநடை
 பட்சியெனு முக்ரதுர கழுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
 பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு
 சிற்றடியு முற்றியபன் னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
 செப்பெனஎ னக்கருள்கை மறவேனே
இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
 எட்பொரிய வற்றுவரை இளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
 ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
 விக்கிநசமர்த்தனெனும் அருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
 வித்தகம ருப்புடைய பெருமாளே

## வல்லக்கோட்டை திருப்புகழ்

ஆதிமுதல் நாளி லென்றன் தாயுடலி லேயிருந்து
 ஆதிமல மாகி நின்று புவிமீதில்
ஆசையுடனே பிறந்து நேசமுடனே வளர்ந்து
 ஆணழக னாகி நின்று விளையாடி
பூதல மெலாம் அலைந்து மா தருடனே கலந்து
 பூமிதனில் வேணு மென்று பொருள்தேடி
போகமதி லேயுழன்று பாழ்நரகெய் தாமலுன்றன்
 பூவடிகள் சேர அன்பு தருவாயே
சீதைகொடு போகுமந்த ராவணனை மாள வென்ற
 தீரனரி நார ணன்றன் மருகோனே
தேவர் முநி வோர்கள் கொண்டல் மாலரிபிர்மாவு நின்று
தேட அரிதான வன்றன் முருகோனே
கோதைமலை வாழு கின்ற நாதரிட பாகம் நின்ற
 கோமளிய நாதி தந்த குமரேசா
கூடிவரும் சூரர் தங்கள் மார்பை இரு கூறு கண்ட
 கோடைநகர் வாழ வந்த பெருமாளே
வல்லக்கோட்டை வாழ வந்த பெருமாளே
 உந்தன் பூவடிகள் சேர அன்பு தருவாயே

## *ஆனந்த தாண்டவக் காட்சி*

தண்டையணி வெண்டையங் கிண்கிணிசதங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்
தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்
கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்
கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ
புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும்வ ளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்
கொண்டநட னம்பதஞ் செந்திலிலும் என்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே
கொங்கைகுற மங்கையின் சந்தமணம் உண்டிடுங்
கும்பழநி கும்பிடுந் தம்பிரானே

## *இன்றய வினைகள் நீங்க*

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்
ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்று மோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னுவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ
நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீலமயில் வாகவுமை தந்தவளே
நீசர்கட மோடனெது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா
சீறிவரு மாறவுண னுவியுண்ணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்
சேருழழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே

## வந்தான் கருப்பன்

வந்தான் கருப்பன் விளையாட வாளில் ஏறி நின்றாட
வந்தான் கருப்பன் விளையாட வாளில் ஏறி நின்றாட

வாளும் வேலும் விளையாட
வாளில் ஏறி நின்றாட
சுக்கு மாந்தடி சுழன்றாட
வந்தான் கருப்பன் விளையாட (வந்தான்)

காலில் சலங்கை கல கலக்க
கையில் வாளும் பள பளக்க
முறுக்கு மீசை துடி துடிக்க
வந்தான் கருப்பன் விளையாட (வந்தான்)

பாலும் சோறும் கம கமக்க
பள்ளயம் இங்கே ஜொலி ஜொலிக்க
பிள்ளைகள் நாங்கள் கொண்டாட
வந்தான் கருப்பன் விளையாட (வந்தான்)

சந்தன கருப்பன் தானாட
சங்கிலிக் கருப்பன் உடனாட
பதினெட்டாம்படி கருப்பனுமே
வந்தான் இங்கே விளையாட (வந்தான்)

முன்னோடியும் இங்கே ஓடிவர
நொண்டியும் இங்கே ஆடிவர
பதினெட்டாம் படி கருப்பனுமே
வந்தான் இங்கே விளையாட (வந்தான்)

கொரட்டி எனும் ஓர் ஆலயமாம்
கூடியிருப்பவன் சாஸ்தாவாம்
தங்கையும் அங்கே அருகிருக்க
தரணியை ஆள வந்தானாம் (வந்தான்)

காவடி சுமந்து நடைபோட
பழனியை நோக்கி விரைந்தோட
வந்தான் கருப்பன் விளையாட
வாளில் ஏறி நின்றாட (வந்தான்)

- அருள் வீரப்பன்

## *கருப்பண்ணசாமி பாடல்கள்*
## *கருப்பர் வரார்*

வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு
வாராரய்யா வாராரு
கருப்ரிங்கே வாராரு. . . (வாராரய்யா )

அள்ளி - முடிச்சகொண்டையப்பா
அழகுமீசைதுள்ளுதப்பா
வல்ல - வேட்டிப் பட்டுடனே
வாரார் - ஐயா ராசாப்போல (வாராரய்யா)

ஆளு-யர அரிவாளாம்
அதுக் - கேத்த கம்பீரமாம்
காலிலே - முள்ளுச் செருப்பாம்
கருப்பனுக்கே தனிச்சிறப்பாம் (வாராரய்யா)

வீச்சரிவாள் கையிலுண்டு
வேகமான குதிரையுண்டு
சுற்றிவரும் பகையழிக்கச்
சுக்குமாந் தடியுமுண்டு (வாராரய்யா)

இடுப்பிலே சலங்கையுண்டு
இடிமுழக்கச் சிரிப்புமுண்டு

வாக்கிலே வலிமையுண்டு
வற்றாத கருணையுண்டு (வாராரய்யா)

கையிலே சவுக்குமுண்டு
கனகமணிச் சலங்கையுண்டு
பாற்கடலில் பள்ளிகொண்ட
பரந்தாமன் நாமமுண்டு (வாராரய்யா)

சந்தனமுண்டு ஜவ்வாதுண்டு
சாம்பிராணி வாசமுண்டு
சம்பங்கி ரோஜாமுல்லை
மணக்குதய்யா இங்கே இப்போ (வாராரய்யா)

## ஆஞ்சநேயனே

ஆஞ்சநேயனே ஆஞ்சநேயனே
அஞ்சனை தனையா ஆஞ்சநேயனே

பொல்லாத ராவணனை இலங்கேசனை ஒரு
புழுவாய் மதித்த வீர ஆஞ்சநேயனே
(ஆஞ்சநேயனே)

நீலக்கடலை ஒரு நீர்த்தாரை போல்
தாவிக் குதித்த பக்த ஆஞ்சநேயனே
(ஆஞ்சநேயனே)

சஞ்ஜீவியைக் கொணர்ந்த ஆஞ்சநேயனே
என்றும் சிரஞ்ஜீவியாயிருக்கும் ஆஞ்சநேயனே
(ஆஞ்சநேயனே)

ராம நாம தியானம் செய்யும் ஆஞ்சநேயனே
சீதா ராம தூதனாக வந்த ஆஞ்சனேநயனே

ராம ராம ராம் ராம ராம ராம்
ராம ராம ராம ராம ராம ராம ராம்
ராம ராம ராம் ராம ராம ராம்
ராம ராம ராம் ராம ராம ராம்
ராம ராம ராம ராம ராம ராம ராம்
(ஆஞ்சநேயனே)

## ஆஞ்ச நேய வீரா

ஆஞ்ச நேய வீரா அனுமந்த சூரா
வாயு குமாரா வானர வீரா
ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெயராம்
சீதாராம் ஜெய ராதே ஷ்யாம்

## அள்ளித்தரும் வள்ளல் முருகன் பாடல்கள்

### வா வா முருகா வடிவேலா

வா வா முருகா வேல் முருகா வல்லக் கோட்டையில் வாழ்முருகா
வா வா முருகா வேல் முருகா வல்லக் கோட்டையில் வாழ்முருகா

வல்லக் கோட்டையில் வாழ்பவனே
வாழ்வை வளம் பெற வைப்பவனே
அன்னதானம் செய்பவர்கே
அருள்தர வேண்டும் வேல் முருகா

திருமணக் கோலத்தில் இருப்பவனே
திருப்பரங்குன்றினில் வாழ்பவனே
திருமால வனின் மருகோனே
சீக்கிரம் வந்தெமைக் காப்பாயே (வா வா முருகா)

சூரனை அழித்து சினம் தணிந்து
செந்தூர்க் கடற்கரை அமர்ந்தவனே
ஷஷ்டி கவசம் படிப்பவர்க்கு
சகல சௌ பாக்கியம் அருள்வாயே (வா வா முருகா)

தனித்து பழனியில் இருப்பவனே
பனித்த சடையனுக்கிளையவனே
உனை நினைத்து வந்திடும் எங்களுக்கு
அனைத்தும் தந்தே அருள்வாயே (வா வா முருகா)

தந்தைக்கு பிரணவம் சொன்னவனே
தகப்பன் சாமி யாய் ஆனவனே
சுவாமிமலையில் வாழ்பவனே
சுவாமி நாதனே அருள்வாயே (வா வா முருகா)

வள்ளி தெய்வானையுடன்
தணிகைமலையில் அமர்நதவனே
துள்ளிவந்திடும் எங்களுக்கு
துணையாய் வந்து நீஇருப்பாயே (வா வா முருகா)

பழத்திற்கு பழனியில் அமர்ந்தவனே
பழமுதிர் சோலையை ஆள்பவனே
பாடிவந்திடும் எங்களுக்கு
பக்கத் துணையாய் இருப்பாயே (வா வா முருகா)

குன்றக்குடியில் அமர்ந்தவனே
குறைகளை எல்லாம் தீர்ப்பவனே
குன்றாக்குடியாய் எமை ஆக்கி
குமரா வந்தெமைக் காப்பாயே (வா வா முருகா)

சிக்கல் நகரில் வாழ்பவனே
சிங்காரமாக இருப்பவனே
சிக்கித் தவித்திடும் எங்களையே
சீக்கிரம் வந்தே காப்பாயே (வா வா முருகா)

எட்டுக்குடியில் இருப்பவனே
எங்கள் குறைகளைத் தீர்ப்பவனே
பாதையாத்திரை செல்பவர்க்கே
பக்கத்தில் அமர்ந்தே அருள்வாயே (வா வா முருகா)

## *செந்தமிழ் மாலை*

முருகா முருகா வேல் முருகா
முருகா முருகா வேல் முருகா (முருகா)

சந்தமிகு செந்தமிழில் மாலை தொடுத்தேன்
செந்தில் வளர் கந்தனிடம் தூது விடுத்தேன்
அந்தமிகு குகன் நெஞ்சில் இடம் பிடித்தேன்
ஆறுமுகன் பேரழகைப் படம் பிடித்தேன் (முருகா)

வண்ணமயில் வாகனத்தில வேல் முருகன்
வள்ளிதெய்வ யானையுடன் மால் மருகன்
தென்னகத்தில் வாழுகின்ற சிலையழகன்
என்னகத்தில் காட்சி தந்தான் கலையழகன் (முருகா)

வெண்ணீறு நெற்றியிலே பளபளக்க
வெண்ணிலவு கண்களிலே ஜிலுஜிலுக்க
பன்னீரும் மார்பினிலே கமகமக்க
பார்வதியின் பாலன் வந்தான் மனம் களிக்க (முருகா)

ஓராறு முகம் கண்டேன்! உளமகிழ்ந்தேன்
ஈராறு விழி கண்டேன்! எனை மறந்தேன்
சீராளன் உருக்கண்டேன் செயலிழந்தேன்
செந்தாமரைப் பதத்தில் சரணடைந்தேன் (முருகா)

முருகா என அழைத்தேன் முறுவல் கண்டேன்
குமரா என அழைத்தேன்! குளுமை கொண்டேன்
கந்தா என அழைத்தேன்! களித்து நின்றான்
கடம்பா என அழைத்தேன்! கனிந்து வந்தான் (முருகா)

பழநி பரங்குன்றம் திருச்செந்தூர்
பழமுதிர் சோலையுடன் சுவாமிமலை
அழகிய திருத்தணிகை மருதமலை
ஆலயங்கள் யாவுமே காட்டுவித்தாய் (முருகா)

## *தங்கரதம்*

முருகா முருகா வேல் முருகா
முருகா முருகா வேல் முருகா (முருகா)

தங்கரதம் ஒன்று இங்கு அசைந்து வர
செந்தில் வளர் கந்தனுமே கொலுவிருக்க
மங்கை மலர் தெய்வானை வள்ளியுடன்
நான் வணங்கும் திருக்கோலம் காணுங்களேன் (முருகா)

தேவரெல்லாம் கூடிநின்று வடம்பிடிக்கத்
தென் பழநி வலம் வரும் தங்கரதமாம்
தங்கரதம் மீதமர்ந்து கொலுவிருக்கும்
தண்டபாணி தெய்வமே சரணமய்யா (முருகா)

பன்னீரும் சந்தனமும் பாற்குடமாம்
பஞ்சாமிர்தம் விபூதி அபிஷேகம்
கொஞ்சு தமிழ் பாலனுக்கு பழநியிலே
கோடிக் கண்கள் வேணுமய்யா காண்பதற்கே (முருகா)

காவடிகள் உன்னைதேடி ஆடிவரும்
கால்நடையாய் பக்தர் கூட்டம் கோடி வரும்
சேவடியே சரணமென வாழ்பவர்க்கே
செல்வநலம் தந்தருளும் கந்த வேலே (முருகா)

கொக்கரக்கோ சேவல் ஒன்று கூடி வர
கோலமயில் நின்று நடமாடி வர
சுப்பையா நாங்கள் அடிமை பாடிவர
சொக்கன் மகன் நீ அதனைக் கேட்டு வர (முருகா)

## மலையில் அரசமைத்த மன்னன்

முருகா முருகா வேல் முருகா
முருகா முருகா வேல் முருகா (முருகா)

அப்பனுக்குப் பாடம் சொன்ன சுப்பய்யா வெறும்
ஆண்டியாகிப் பழனி வந்த வேலய்யா
கற்பனையைத் தாண்டிநிற்கும் கந்தய்யா உனைக்
காண்பதற்கு நடந்துவந்தோம் நாமய்யா (முருகா)

மலையினிலே அரசமைத்த மன்னவனே எங்கள்
மடியினிலே குழந்தையான கந்த வேலே
தலை இருக்கும் வரையில் உனை வணங்கிடுவோம் உன்
சந்நிதியில் ஆடிப்பாடி மயங்கிடுவோம் (முருகா)

ஏறுகின்றோம் இறங்குகின்றோம் வாழ்வினிலே மயில்
ஏறிவரும் நீயறிவாய் நேரிலே
மாறிவரும் நாகரிக உலகினிலே நாங்கள்
மாறவில்லை தெய்வபக்தி நிலையினிலே (முருகா)

இலங்கையிலும் உனதுகோயில் கட்டினோமே பர்மா
எங்கனுமே உனதுசிலை நாட்டினோமே
மலேயா நாட்டில் உனது கோவில் ஆக்கினோமே எங்கள்
மனதிலுள்ள பயத்தையெல்லாம் போக்குவாயே (முருகா)

தண்டபாணி கோவிலின்றி ஊருமுண்டா உன்னைத்
தண்டனிட்டு வணங்கிடாத பேருமுண்டா
கொண்டு வைக்கப் போன எங்கள் கொள்கையே உனைக்
கொண்டு வைக்கப் போன கொள்கை யல்லவோ! (முருகா)

செந்திலாளும் பழநியாண்டி முருகவேளே எங்கள்
அன்பு மக்கள் வாழ்வு காக்க வருக வருகவே
அந்தமில்லா அழகுத் தெய்வம் கந்தவேலே எங்கள்
அன்னதானம் சிறக்கவே வருக வருகவே (முருகா)

ஆண்டுதோறும் ஆண்டுதோறும் வருகின்றோம் நீ
ஆண்டுவரும் பழநிநோக்கி வருகின்றோம்
வேண்டிவரும் நலங்களெல்லாம் அருளுவாயே உன்
வீட்டுமக்கள் போலஎமை ஆளுவாயே (முருகா)

## கந்தனே சொந்தம்

முருகா முருகா வேல் முருகா
முருகா முருகா வேல் முருகா (முருகா)

நல்லதமிழ்ச் சொல் லெடுத்து நாளும் பாடு
நம் தலைவன் முருகனையே நாடி ஓடு
வல்ல கதிர் வேலவனும் வள்ளி யோடு
வந்து நலம் தந்தருள்வான் வாகை யோடு (முருகா)

அஞ்சு வகைக் கனியெடுத்து அமுது செய்வோம்
ஆறுமுகன் மேனியிலே தொழுது பொய்வோம்
கொஞ்சு மொழிக் குமரனுக்கு பூக்கள் கொய்வோம்
கூறு தமிழ்ச் சொல்லெடுத்து பாக்கள் நெய்வோம் (முருகா)

தண்ணாரும் பழநி மலை நடந்து செல்வோம்
சாலை வழித் துன்பமெல்லாங் கடந்து செல்வோம்
கண்ணான முருகனையே கொஞ்சி மகிழ்வோம்
கருணை மழை பொழிகவெனக் கெஞ்சிக் கேட்போம் (முருகா)

கல்லமுத்தித் தாரரித்துத் பாதம் தேயும்
காலிரண்டும் கொப்பளித்து கன்றிப்போகும்
வெல்லமெனும் கந்தனவன் பேரைக் கூற
வேதனைகள் தீர்த்து நடை வேகங்கூடும் (முருகா)

கந்தனையே சொந்தமென எண்ணும் போது
கவலையெனும் கடலதுவும் வற்றிப் போகும்
சிந்தனையிற் தெளிவு வரும் செல்வஞ் சேரும்
செரு முனையில் பகையழிந்து வெற்றி கூடும் (முருகா)

அண்ணனுக்கும் யானையெனும் மாறுதலை
அப்பனுக்கும் கங்கையெனும் மாறுதலை
சண்முகனாம் கந்தனுக்கும் மாறுதலை
தந்தருள்வான் எந்தனுக்கும் மாறுதலை (முருகா)

## ஆலோலம்

ஆலோலம் பாடுகின்ற வள்ளியம்மைக் கழுத்தில்
அணியாரம் இட்ட பெருமான்
ஆகாயம் பூமியிடை நீராவிபோல்வடிவில்
ஆதாரமான பெருமான்
மேலாளர் கீழாளர் பேதங்கள் இல்லாது
மெய்யாள வந்த பெருமான்
மின்னாகி இடியாகி மழையாகிக் காற்றாகி
விளைவாக நின்ற பெருமான்
கோலாலம்பூரில் வளர் கோதண்டபாணி இவன்
கோவில் கொண்டாடு மனமே
கூற்றேதும் வாராது கொடுநோயும் சேராது
குறையாத வாழ்வு மிகுமே!
ஓ மென்ற சிறுமுட்டை உள்வீடு அவன்வீடு
உன்வீடும் அந்த இடமே
ஓசைக்கு மணியுண்டு பூசைக்கு மணமுண்டு
உன் வாழ்வு கந்தன் வசமே
நாமென்ற ஆங்காரம் நமதென்ற எக்காளம்
நடவாது வேலனிடமே
நடக்கட்டும் பார்ப்போ மென்றிருக்கட்டும் உன் உள்ளம்
நலம்யாவும் வீடுவருமே
கோமன்னன் வாழ்கின்ற கோலாலம்பூர் செந்தூர்
கொடிகட்டி ஆளவிடுமே
கொண்டாடு கொண்டாடு தெண்டாயுதத்தானை
குறையாத செல்வம் மிகுமே

## *அள்ளிக் கொடுப்பவன்*

அள்ளிக் கொடுப்பதில் வல்லமை பெற்றவன்
அப்பன் பழநியப்பன் தினம்
அச்சன் தவிர்ப்பவன் ஆறுதல் சொல்பவன்
அப்பன் பழநியப்பன்

கள்ளம் கபடம் இல்லாதவர் தம்மிடம்
காவலில் நின்றிருப்பான் அங்கு
கால்நடையாய்வரும் மானிட ஜாதியைக்
கண்டு களித் திருப்பான் (அள்ளி)

துள்ளிவரும்வடி வேலுக்கு மேலொரு
ஜோதிப்பிழம்பு முண்டோ ? அந்த
சுப்பையன் போலொரு அற்புதத் தெய்வத்தை
சொல்ல மொழியுமுண்டோ ?

வெள்ளி முகம்பனிரெண்டையும் கண்டபின்
வேறொரு சொர்க்க முண்டோ ? ஆண்டி
வேஷத்தி லாயினும் வீரத்திலாயினும்
வேலனை வெல்வ துண்டோ ? (அள்ளி)

சித்தர் வணங்கிய சேவற் கொடியோனைச்
சேர்ந்து வணங்கிடுவோம் அந்த
சிக்கலிலாயினும் செந்திலி லாயினும்
சேர்ந்து பணிந்து திடுவோம்!

பக்தருக் கென்று திறந்திருக்கும் தென்
பழநியைக் கண்டு கொள்வோம் அங்கு
பாலா பிஷேகமும் தேனா பிஷேகமும்
செய்து பணிந்திடுவோம்! (அள்ளி)

கொட்டிக் கொடுப்பவன் கோவிலைப் பார்த்திட
கோஷமிட் டோடிடுவோம் - முள்ளும்
குத்தட்டுமே கல்லும் தட்டட்டுமே வலி
கொஞ்சமும் கண்டு கொள்ளோம்! (அள்ளி)

ஆறும் அறுபதும் ஆன இருபதும்
ஆடிநடந்து செல்வோம் - பல
ஆனந்தப் பாடல்கள் வேலனைப் பாடட்டும்
அன்புடன் ஊர்ந்து செல்வோம்!

ஊறுகள் நேரட்டும் உமையவள் மைந்தனை
உச்சத்தில் வைத்திருப்போம் - கையில்
உள்ளதை அன்னவன் கோவிலுக்கே தந்து
மிச்சத்தில் வாழ்ந்திருப்போம்! (அள்ளி)

வேலன் குமரன் திருச்செந்தில்
வேட்டுவன் கந்தனுக்கு - இரு
கால்கள் நடக்கின்ற நடையினில் தானுயர்
கனிவு நிறைந்திருக்கு!

காலம் வழிவிடும் கச்சிதமாய் சென்று அவன்
கால்களிலே விழுவோம் - அவன்
கால்களிலே விழக்கால்கள் நடக்கட்டும்
காவிரிபோல் வளர்வோம்! (அள்ளி)

சரவணையி லேபிறந் தாறுமுக வாடிவான
சண்முகா வருக வருக
தர்க்கமிகு சூரனை திக்கவேல் விட்டதொரு
சுவாமியே வருக வருக

அரவணையில் மால் மருக குமரகுரு பரனெங்கள்
ஆறுமுகா ஓடிவருக
அலை கடலின் மகரமீன் ஓடி விளையாடிய
அமரர்பதி வருக வருக

கருவணையில் நற்சதுர மேல் நின்று நடனமிடும்
கணபதி துணைவன் வருக
கடியை எண்ணாயிரம் சமணரை வதைத்திடும்
கந்தனே ஓடிவருக

மருவணையில் பெண்ணாட உலகமது காக்கின்ற
வடிவேல் இலங்கு காமும்
வாலவய தாயுனது வாழுமயில் ஏறிநட
மாடிவரு முகசேனே! (அள்ளி)

## ஆறுமுக கடவுள்

ஆர் ஆர் இருக்கினும் என் கவலை மாற்றுவது
ஆறுமுகக் கடவுள் என்று
அவனிமுதல் ஐம்பத்து ஆறுகாத தேசமும்
அறியாதவரும் உண்டோ
ஈரு ஆறுகையனே இருமூன்று முடியனே
இனியகனி வாய் அழகனே
எட்டு எட்டு அறுபத்து நாளனே தோளனே
ஏக கண போகமான
கார் ஆறும் மேனிகரிமுகனுக்கு இளையனே
கழுகாசல ஆறு முகனே
கற்றறி உற்றனே சித்தப்ர சித்தனே
கந்தப்பன் ஆதி தேவே
தார் ஆறும் ஐயனே துய்யனே ஐயனே
சரிசரி வரவேணுமே
தரணிதனில் மயில் மீதில் விளையாடி வருகின்ற
சண்முகக் குமர குருவே!

## வேலன் வருகை

வேலா வா கந்தா வா குமரா வா வா
மெய்ஞானப் பொருளே வா மீனாள் ஈன்ற
வாளாவா எமது கலி துன்பம் தீர்க்க
பன்னிரண்டு கண்ணதனால் பார்க்க வா வா
சேலாடும் நயனவள்ளி பங்கா வா வா
திருமால் தன் மருகாவா சேவலாய் வா வா
ஆலாலம் உண்ட கண்டன் புதல்வா வா வா
அரஹரா தென்பரங்குன்ற ஐயா போற்றி

## எடுத்த முறை

எடுத்த முறை தவறாமல் இருக்க வேண்டும்
எங்கினும் உன் செந்தமிழை பாட வேண்டும்
தடுத்தோரை வாயடைக்க செய்ய வேண்டும்
சடாட்சரத்தில் உன்பெருமை நாட்ட வேண்டும்
திடத்துனே எமையாளும் ஐயா வா வா
திடத்துனே எமையாளும் ஐயா வா வா
சிவ சிவ செந்தில்வளர் சிவனே போற்றி

## கோடையாண்டவா

கோடையாண்டவா வல்லக் கோட்டை ஆண்டவா
உந்தன் பெயரில் சிந்தைவைத்து சந்தம் பாடவா ? ஐயா சந்தம் பாடவா ?

சின்னவயதில் அன்னை சொன்னாள் உன்னைத் தெரிந்தேன் நான்
தந்தையோடு செந்தூர்வந்து உன்னைக்கண்டேன் நான்
அன்று தொட்டு இன்று வரையில் உன்னை மறந்தேனா?
கந்தா நீயும் என்று வந்து கருணை காட்டுவாய் ?
அய்யா கருணை காட்டுவாய் (கோடையாண்டவா)

எண்ணும் எழுத்தும் கற்கும் முன்னால் உன்னைக்கற்றேனே
அன்னை பெயரை அறியுமுன்பே உன்னை அறிந்தேனே
இன்னும்கூட உந்தன் கருணை இல்லையே முருகா!
என்றுவந்து என்னைக் காப்பாய் செந்தூர்வாழ் முருகா!
அய்யா செந்தூர் வாழ் முருகா! (கோடையாண்டவா)

காலை கண்ணைத் திறந்த உடன் கந்தா என்பேனே!
வேலை முடித்துத் துயிலும் போதும் வேலா என்பேனே!
ஏழை என்னைக் காக்க நீயும் என்று வருவோயோ?
அந்தநாளை இன்றே தருவாய் செந்தூர் வாழ் முருகா!
ஐயா செந்தூர் வாழ் முருகா! (கோடையாண்டவா)

## எங்கும் முருகன்

மலையிலும் இருக்கின்றான்........முருகன் (2)
என் மனதிலும் இருக்கின்றான் ......!
கலையிலும் இருக்கின்றான் .....முருகன் (2)
என் கருத்திலும் இருக்கின்றான்
முருகா.......... முருகா......... முருகா........ முருகா .....!

கன்னியர் இருவர் சூழ............ அவன்
காவடி உலகம் ஆட .....! (2)
நாம் எண்ணியதெல்லாம் தருவான்...... துணை
எங்கு சென்றாலும் வருவான் .....! (2)

(மலையிலும்)

பணிந்தால் நம்மை அணைப்பான்...........
உண்மை பாசமும் அன்பும் இணைப்பான் .....! (2)
நாம் மறந்தாலும் அவன் நினைப்பான் ......... தன்னை
மறவா நெஞ்சினில் இருப்பான்.....! (2)
(மலையிலும்)

## ஆறுபடைவீடழகா முருகா

ஆறுபடை வீடழகா முருகா
ஆனந்தனே மால் முருகா (வேல் வேல்)
அழகுமயில் ஆடிவரச் சேவல்கொடி முன்னேவர
இன்னும்வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

ஏறுமயில் ஏறிவந்தே முருகா
எங்கள் குறை தீர்ப்பவனே (வேல் வேல்)
கூறும் வினைதீர்த்து வைக்க கோலமயில் ஏறி நீயும்
இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

குன்றக்குடி வேலவனே முருகா
குறைகளெல்லாம் தீர்ப்பவனே (வேல் வேல்)
குன்றம் விட்டு நீயிறங்கித் தஞ்சமென்றோர்
தாழ்வகற்ற இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

எட்டுக்குடி வேலவனே முருகா
எங்கள் குலம் காப்பவனே (வேல் வேல்)
செட்டிமகன் ஆனவனே
செங்கதிர்வேல் நீ எடுத்து இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

செந்தூரில் வாழ்பவனே முருகா
செல்வநலம் தருபவனே (வேல் வேல்)
எங்கள்குறை தீர்த்திடவே தங்கரத மீத மர்ந்து
இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

பழநிமலைப் பேர் அரசேமுருகா
பாரெல்லாம் ஆள்பவனே (வேல் வேல்)
பக்தர் குறை தீர்த்திடவே பச்சைமயில் மீதமர்ந்து
இன்னும் வரத்தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

சிங்கார வேலவனே முருகா
சிக்கல் எலலாம் தீர்ப்பவனே (வேல் வேல்)
தங்கமனம் கொண்டவனே தாழ்வகற்றி வாழ்வுதர
இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

காவடிகள் ஆட்டத்திலே முருகா
கவலையெல்லாம் தீர்ப்பவனே (வேல் வேல்)
சேவடியே சரணமென ஆவலுடன் காத்திருக்கோம்
இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

கொஞ்சு தமிழ்ப் பாடல் கேட்கும் முருகா
குழந்தை வடிவேலவனே (வேல் வேல்)
தஞ்சமென்றே தாள்பணிந்தோம் பஞ்சம் பிணிபோக்கிடவே
இன்னும் வரத் தாமதமேன்
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

சொன்ன தமிழ் குறையுள்ளதோ முருகா
சொன்ன தெல்லாம் கேட்கலையோ (வேல் வேல்)
அன்னை தந்த வேலெடுத்து அழகுமயில் மீதமர்ந்து
இன்னும் வரத் தாமதமேன். . . .
முருகா இன்னும்வரத் தாமதமேன் (2)

அலையாடும் செந்தூரிலே முருகா
விளையாடும் செல்வ மகனே (வேல் வேல்)
நிலையான செல்வம் தந்து வளமான வாழ்வுதர
வரவேணும் எந்தனருகே
முருகா வரவேணும் எந்தனருகே (2)

## ஆடும் ஊஞ்சல்

ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே
அய்யா முருகா ஆடுகவே (ஆடுக)

ஆழிப் படுக்கை கொண்டோனின்
அருமை மருகா ஆடுகவே
ஊழிதாண்டி நிற்பானின்
உத்தமச் செல்வா ஆடுகவே (ஆடுக)

வாழும் மனிதர் யாவருக்கும்
வழிக்குத் துணையாம் வேலவனே
ஆளும் கவலை ஓடிடவே
ஆடுக ஊஞ்கல் ஆடுகவே (ஆடுக)

ஆடகப் பொன்னால் ஊஞ்சலிட்டு
அதற்கு வயிரக் கயிறுமிட்டு
கூடிடும் அடியார் ஆட்டிடவே
குமரா ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

பாடுகள் குறைந்தே மாந்தரெல்லாம்
பண்பாய் வாழ்ந்து உயர்ந்திடவே
வாடிடும் பயிர்கள் வளம் பெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

முன்னேபின்னே சென்றாலும்
முனையில் ஒன்றி நின்றிடுமே
என்னே வாழ்க்கை என்றாலும்
எல்லாம் உன்னைச் சுற்றியதே (ஆடுக)

குன்றாய் குடியாய் எமையாக்கும்
குன்றக்குடியின் வேலவனே
கண்ணே மணியே கதிர் வேலா
கவினார் ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

விண்ணவர் செல்வி தெய்வானை
வேடவர் மகளாம் வள்ளியுடன்
மண்ணகம் சுற்றும் மயிலேறி
மேதகு சேவற் கொடியாட (ஆடுக)

கொண்டிடுங் காதல் உணர்வோடு
கனிந்த நெஞ்ச ஊஞ்சலிலே
அன்புடன் ஏறி இனி தமர்ந்தே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

மண்ணைப் பிளந்து பெரும்பேட்டில்
மாபெரும் அருளுடை வடிவுடனே
பெண்ணின் நல்லார் இருவருடன்
பெருமயில் ஏறி வந்தவனே (ஆடுக)

கண்ணே தெரியாக் காட்டிடையே
கலங்கித் தவிக்கும் எங்களுக்கே
உன்னால் வழியும் தெரிந்துவர
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

ஆறடி நெடிதாம் உருவுடனே
அடியார் பக்தி உருவேற
பேரருள் கொண்டாய் பெரும்பேடா
பிள்ளைகள் நலிவினைப் போக்கிடவே (ஆடுக)

சீரடி வணங்கிட வந்துள்ளோம்
செல்வா அருளைத் தந்திடுவாய்
ஆரிருள் விலகி ஒளிபெறவே
ஆடுக ஊஞ்சல் ஆடுகவே (ஆடுக)

## ஆறெழுத்து அழகன்

ஆறெழுத்தில் பேரெடுத்த அழகனம்மா அழகன் அவன்
ஆறுபடை வீடெடுத்த முருகனம்மா முருகன் (2)

நீரெடுத்த மேனியுடன் இருப்பானம்மா நல்ல
நெஞ்செடுத்த நினைவிலெல்லாம் சிரிப்பானம்மா (2)
தேரெடுத்து ஊர்வலமாய் வருவானம்மா (2)
வாழ்வில் சீரெடுத்து சிறப்பெடுத்து தருவானம்மா
(ஆறெழுத்தில்)

முத்தமிழே முருகன் வாழும் ஆலயமாகும் நல்ல
முதிர்ந்த பக்தி முருகன் ஏறும் பொன்மயிலாகும் (2)
சத்தியமே தலைவன் எடுத்த "வடிவேலாகும்" - (2)
ஞான தத்துவமே 'சரவணபவ' மந்திரமாகும்.
(ஆறெழுத்தில்)

## வெள்ளி ஊஞ்சல்

ஆடுதய்யா ஆடுதய்யா வெள்ளி ஊஞ்சல்
அழகாக ஆடுதய்யா வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

உள்ளமெல்லாம் நாடுகின்ற வெள்ளி ஊஞ்சல்
ஓம் முருகன் ஆடுகின்ற வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

தெள்ளமுதச் சந்தப்பாட்டு வெள்ளி ஊஞ்சல்
தென்பழனி வேந்தன் பாட்டு வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

சக்திமகன் சரவணத்தின் வெள்ளி ஊஞ்சல்
சண்முகனின் பொன்முகமே வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

பக்திக்கடல் ஓசைஒலி வெள்ளி ஊஞ்சல்
பார்புகழும் வேலன் ஒலி வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

திருநீற்றுத் தெய்வமணம் வெள்ளி ஊஞ்சல்
செம்படையின் பட்டிபுகழ் வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

அருளாடி ஐயா ஆட்டும் வெள்ளி ஊஞ்சல்
எட்டுத்திக்கும் புகழ்மணக்கும் வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

ஏழிசையின் கலைமணக்கும் வெள்ளி ஊஞ்சல்
செல்ல மகன் புகழ்பாடும் வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

செல்வமகன் வரம் நாடும் வெள்ளி ஊஞ்சல்
சடையப்பர் மண்டபத்தில் வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

சஞ்சலத்தைப் போக்குகின்ற வெள்ளி ஊஞ்சல்
நடைப்பயண இடர் நீக்கும் வெள்ளி ஊஞ்சல்
(ஆடுதய்யா)

## பச்சைமயில் வாகனனே

பச்சைமயில் வாகனனே சிவ
பாலசுப்பிரமணியனே வா - என்
இச்சையெல்லாம் உன்தன் மேலே வைத்தேன்
எள்ளளவும் பயமில்லையே (பச்சை)

கொச்சைமொழியானாலும் உன்னைக்
கொஞ்சிக், கொஞ்சிப், பாடிடுவேன் - எந்தன்
சச்சையெல்லாம் அகன்றதப்பா எங்கும்
சாந்தி நிலவுதப்பா (பச்சை)

வெள்ளம் அது பள்ளந்தனிலே பாயும்
தன்மைபோல் உள்ளந்தனிலே நீ
மெல்ல மெல்ல புகுந்து விட்டாய் எந்தன்
கள்ள மெல்லாம் கரையுதப்பா (பச்சை)

நெஞ்சமென்னும் கோவில் அமைத்தேன் அதில்
நேர்மை எனும் தீபம் வைத்தேன் - உன்
செஞ்சிலம்பு கொஞ்சிடவே வா வா வா
சேவற் கொடி மயில் வீரா (பச்சை)

அலைகடல் ஓரத்திலே எங்கள்
அன்பான சண்முகனே
அலையாக வரம் தருவாய் உனக்கு
ஆனந்த கோடி நமஸ்காரம் (பச்சை)

## அப்பா என்றால் முருகப்பா

கோரஸ் :

வேலா வேலா வேலய்யா வெற்றி வடி வேலய்யா
வேலா வேலா வேலய்யா வெற்றி வடி வேலய்யா
அப்பா என்றால் முருகப்பா அய்யா என்றால் வேலய்யா
அம்மா என்றால் சண்முகம் அத்தனையும் உன்முகம்

என்ன பெயரை சொல்லி உன்னைக் கூப்பிட்ட போதும்
என் மனமும் இனிப்பதென்ன நினைத்திட்ட நேரம்
செந்தமிழும் போதுமா தேன் தினைமா வேணுமா (வேலா)

கண்ணாலுன்னைக் காண்பதிலே பேரானந்தமே
கால் அழகு ஒன்றுமட்டும் கருத்தில் மேவுமே
கன்னித் தமிழ் போதுமா காவடியும் வேணுமா (வேலா)

வேல் அழகை பார்ப்பவர்கள் வேதனைமாறும்
விழி அழகு வினையறுத்து சாதனை கூறும்
பாட்டு மட்டும்போதுமா பால்பழமும் வேணுமா (வேலா)

மயிலாட்டம் மக்களுக்கு ஒரே கொண்டாட்டம்
மகுடமணி ஒளியழகோ என்றும் கொண்டாட்டம்
பாட்டு மட்டும் போதுமா பஞ்சாமிர்தம் வேணுமா (வேலா)

சேவல்கொடி அசைவதிலோர் சிங்காரச் சிறப்பு - அது
ஜெகத்தினையே எழுப்பிவிடும் சேதியின் சிறப்பு
பாட்டுமட்டும் போதுமா பன்னீருனக்கு வேணுமா (வேலா)

வலதுபுறம் தேவயானை சூரியனாமே
இடதுபுறம் வள்ளியம்மை சந்திரனாமே
ஒளியழகே வேலய்யா ஓடிவாராய் முருகய்யா (வேலா)

# என்னோடு பேசு சாமிநாதா

ஈசனோடு பேசியது போதுமே
என்னோடும் பேசுசாமி நாதனே
ஆசையோடு தமிழெடுத்துப் பாடினேன்
ஐயா உன் திருவடியை நாடினேன் (ஈசனோடு)

கண்சீறும் பொறியூரி பிறந்தவா
கமலத்தில் அன்று நீயும் தவழ்ந்தவா
தண்ணீரில் சளியுனக்குப் பிடிக்குமே
சரவணத்துப் பொய்கைவிட்டு எழுந்துவா (ஈசனோடு)

கடலோரம் நிற்பவனே சண்முகா
கடல் நீரால் உடல் அரிக்கும் அல்லவா
நடமாடும் மயிலேறி இங்குவா
நல்ல மனக் கோயிலுண்டு தங்கவா (ஈசனோடு)

குன்றத்திலே கல்யாணம் ஆனதால்
குவலயத்தை நீமறத்தல் நியாயமா
குன்றத்தையும் வீட்டிறங்கி ஓடிவா
கொஞ்சு தமிழ் இசைகேட்டு ஓடிவா (ஈசனோடு)

பன்னிரண்டு கண்களாடுந் தெய்வமே
என்னை மட்டும் காணமனம் இல்லையோ
உன்னை விட்டு யாரை இனி நம்புவேன்
சண்முகனே என்னுடனே வம்பு ஏன் (ஈசனோடு)

ஒன்றிரண்டு விழியேனும் திறந்திடு
ஓரவிழிப்பார்வையேனும் புரிந்திடு
என்றுமுனை நம்பிநின்றேன் வரங்கொடு
ஏற்றமுடன் நான் வாழ வரங்கொடு (ஈசனோடு)

## *தங்கத்தேரில் வா வா*

கோரஸ் : வேல்வேல் வேல்வேல் வேல் முருகா வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்
(வேல் வேல்)

ஆடிபாடி உன்னைத்தானே தேடிவாரோமே
அரோகரா என்று சொல்லி பாடிவாரோமே!
தேடி வந்தோர் வாழ்க்கையிலே நலங்கொடுத்திடும்
தண்டபாணித் தெய்வமே நீ தங்கத் தேரில் வா வா (வேல் வேல்)

பார் புகழும் பழனிமலை ஆண்டவனே வா
பரங்குன்றப் பேரழகே வேலெடுத்து வா
சீர் மேவும் சரவணையில் தவழ்ந்தவனே வா
சிங்கார வேலவனே தங்கத் தேரில் வா வா! (வேல் வேல்)

வண்ணமயில் கொண்டவனே வா வா வா
வடிவழகே திருமுருகே ஓடோடி வா
எண்ணமெல்லாம் நிறைந்தவனே வா வா வா
எழில் நிலவே தங்கத்தேரில் ஏறிநீயும் வா வா! (வேல் வேல்)

பிரணவத்தின் பொருள் உரைத்துப் பெருமைகொண்டவா
திறமைமிகு சூரர்படை வென்று வந்தவா
அருணகிரி பாட்டினிலே அகமகிழ்ந்தவா
அன்பரெல்லாம் மகிழ்ந்திடவே தங்கத்தேரில் வா! வா! (வேல் வேல்)

ஆறுமுகம் ஆகிவந்த வேலவனே வா
அன்பருள்ளம் கோயில் காணும் ஆனந்தனே வா
கூறும் வினை தீர்த்துவைக்க வேலெடுத்துவா
குன்றம் கண்ட தண்டபாணி தங்கத் தேரில் வா வா! (வேல் வேல்)

காவடிக்கு வழித்துணையாய் வேலைதந்த வா
கடம்பனோடு இடும்பனையும் காவல் தந்த வா
ஆடிவரும் காவடியைக் காணவேண்டாமா ?
அழகு முகம் காட்டி இங்கே சிரித்து மகிழ வா வா! (வேல் வேல்)

ஆடிவரும் காவடிக்குள் சேர்ந்து வருபவன்
அழகுமுகம் காட்டி அங்கே சிரித்து நிற்பவன்
அருளாடி உருவினிலே காட்சி தருபவன்
அவரோடு தனிமையிலே பேசிப் பேசி மகிழ்பவன் (வேல் வேல்)

கும்பிட்டோர் குடும்பத்திலே சொந்தம் கொண்டவன்
கும்பிட்டோர் நலம்காக்கப் பிரம் பெடுப்பவன்
பிரம் பெடுத்து ஆடுகின்ற பேரழகே வா
பெருமை சொன்னோம் தண்டபாணி தங்கத் தேரில் வா வா!
(வேல் வேல்)

உன்னருளாள் வாழ்வதிலே பெருமை கொள்கிறோம்
உன் வாசல் வருவதில் சுகமும் காண்கிறோம்
எண்ணமெல்லாம் நிறைந்தவனே எழில் முருகே வா
வண்ணமயில் விட்டிறங்கித் தங்கத் தேரில் வா வா! (வேல் வேல்)

பழத்துக்காக சண்டை போட்டுப் பழனி சென்ற வா
அவ்வைப் பாடலுக்கே பழமும் தந்து ஊதச் சொன்னவா
அள்ளித் தரும் வள்ளலே என் செந்திலாண்டவா
ஆனந்தமாய் வேல் பிடித்துத் தங்கத் தேரில் வா வா! (வேல் வேல்)

உன்னழகைக் காண்பதற்கே ஓடி வருகிறோம்
உன்னருளைப் பெறுவதற்கே தேடி வருகிறோம்
வண்ணமயில் ஏறிவரும் வடிவழகே வா
அன்னை தந்த வேலுடனே தங்கத் தேரில் வா வா! (வேல் வேல்)

அன்னையவள் மீனாட்சி வாழ்த்தி மகிழ்கிறாள்
அப்பன் மதுரைச் சொக்கேசன் பெருமை கொள்கிறார்
தேவர்மகள் தெய்வானை மெல்ல சிரிக்கிறாள்
திணைப்புனத்து வள்ளிமயில் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கிறாள்
(வேல் வேல்)

## பூசம் வந்தது பூசம்

பூசம் வந்தது பூசம் - விபூதி
சந்தன வாசம்
தேசமெங்கும் முருகனுக்குத்
திருவிழா உல்லாசம் (பூசம்)

திருப்பரங்கிரி அழகன் - அவன்
திருச்செந்தூரில் மறவன்
விருப்பமுடன் பழனி வந்த
வேலேந்தி அழகன் (பூசம்)

மந்திர உபதேசி - சாமி
மலையில் பிரம்மச்சாரி
சுந்தரமாய் உலவிவரும்
சோலைமலை வாசி (பூசம்)

தாருகனை அழித்து - சிங்கன்
தலையை எட்டி மிதித்து
சூரர்குலம் வேரறுத்தான்
துள்ளும் வேலை எடுத்து (பூசம்)

ஆடிவரும் வேலன் - அவன்
அன்னை சக்திபாலன்
நாடிவரும் செல்வ மெல்லாம்
நல்கும் அனுகூலன் (பூசம்)

வாகை கொண்ட வேலை - தினம்
வணங்குவதே வேலை
தோகைமயில் வேல் நமக்குச்
சூட்டும் வெற்றிமாலை (பூசம்)

போனதெல்லாம் போக - இனி
புதியபிறவியாக
வானும் மண்ணும் வசப்படுமே
மயிலும் வேலும் ஆட! (பூசம்)

## எத்தனை அலங்காரம்

எத்தனை அலங்காரம்
முத்தமிழ் முருகனுக்கு எத்தனை அலங்காரம்
சக்தியின் பிள்ளை
சரவணமுத்துக்கு எத்தனை அலங்காரம் (எத்தனை)

சித்தம் போற்றும்
சிவனார் பிள்ளைக்கு எத்தனை அலங்காரம்
குழந்தை அலங்காரம்
கோடிப்புன்னகை கூட்டும் அலங்காரம் (எத்தனை)

மழலை அலங்காரம்
மங்கையர் தாலாட்டி மகிழும் அலங்காரம்
சிறுவன் அலங்காரம்
சிவனுக்கு மந்திரம் செப்பும் அலங்காரம் (எத்தனை)

குமரன் அலங்காரம்
கோதையர் இருவர் கொஞ்சும் அலங்காரம்
வேலன் அலங்காரம்
வேல்கொண்டு சூரனை வீழ்த்தும் அலங்காரம் (எத்தனை)

வேடன் அலங்காரம்
வேல்விழி வள்ளியை விரும்பும் அலங்காரம்
விருத்தன் அலங்காரம்
விநாயகர் துணையின் வெற்றி அலங்காரம் (எத்தனை)

அரசன் அலங்காரம்
அனைத்து செல்வமும் அளிக்கும் அலங்காரம்
ஆண்டி அலங்காரம்
ஆசையை நீக்கிய அழகு அலங்காரம் (எத்தனை)

சந்தன அலங்காரம்
சகல புகழையும் தந்திடும் அலங்காரம்
திருநீர் அலங்காரம்
தீவினை போக்கிடும் திவ்ய அலங்காரம் (எத்தனை)

மலர்கள் அலங்காரம்
மங்களம் தருகின்ற மகிழ்ச்சி அலங்காரம்
திருமண அலங்காரம்
தேவியர் இருவர் திருப்பூட்டும் அலங்காரம் (எத்தனை)

நண்பர்கள் அனைவரும் நடத்தும் பூஜையில்
எத்தனை அலங்காரம்
நாடும் வீடும் போற்றும் நல்ல
கந்தர் அலங்காரம் (எத்தனை)

## *வேதனைகள் தீருமையா வேலாயுதா*

கோரஸ் :

வேல் வேல் வேலவனே வேலாயுதா
வேதனைகள் தீருமையா வேலாயுதா!

குன்றத்திலே அமர்ந்தவனே வேலாயுதா! - எம்
குறைகள் எல்லாம் தீர்த்து வைப்பாய் வேலாயுதா! (வேல்)

பழனிமலை வேலவனே வேலாயுதா! - எங்கள்
பழவினை தீர்த்திடுவாய் வேலாயுதா! (வேல்)

காவடிகள் ஆட்டத்திலே வேலாயுதா! - எங்கள்
கஷ்டமெல்லாம் தீர்ந்து போச்சு வேலாயுதா! (வேல்)

குன்றக்குடி குமரனே நீவேலாயுதா! - நீ
குறவள்ளி மணாளனே வேலாயுதா! (வேல்)

திருத்தணிகை வேலவனே வேலாயுதா! - உன்
திருவருளைத் தரவேணும் வேலாயுதா! (வேல்)

அருட்சுடராய் வந்தவரே வேலாயுதா! - ஐயா
ஆறுமுகமானவரே வேலாயுதா! (வேல்)

சுவாமிமலை வேலவனே வேலாயுதா! - ஐயா
சுப்ரமணிய மானவரே வேலாயுதா! (வேல்)

பழனிமலை வருகின்றோம் வேலாயுதா! - உன்
பக்தருக்கு துணை நிற்பாய் வேலாயுதா! (வேல்)

தமிழ் குடியின் காவலனே வேலாயுதா!
முத்தமிழும் ஆனவனே வேலாயுதா! (வேல்)

வள்ளிக்கு கை கொடுத்தாய் வேலாயுதா - எம்
வாழ்க்கைக்கும் கை கொடுப்பாய் வேலாயுதா (வேல்)

புள்ளி மயில் ஏறிவரும் வேலாயுதா - உன்
பூ முகத்தைக் காட்டிவிடு வேலாயுதா! (வேல்)

தைபூச திருநாளில் வேலாயுதா! - உன்
திருவடியைத் தேடி வந்தோம் வேலாயுதா! (வேல்

# அப்பன் பழனி அப்பனடா

அப்பன்பழநி அப்பனடா - அவன்
அரும்பெரும் திரவியக் கப்பலடா
அற்புதம் காட்டும் தலைவனடா - அவன்
அன்புக்குப் பணி செய்யும் இறைவனடா (அப்பன்)

காண்போம் நாம் அவன் படைவீடு - தம்பி
கால்வலி மறந்து நடைபோடு
கண்டால் நமக்கில்லை ஒருகேடு - நீ
காவடி எடுத்து நடைபோடு (அப்பன்)

வணிகளின் குலத்துக்குத் தாயாவான் - அவர்
வளைவினில் ஓடிடும் சேயாவான்
கவிஞர்கள் பாட்டுக்கு வாயாவான் - எங்கும்
கடும்பகை கண்டாலும் தீயாவான் (அப்பன்)

ஆண்டிக்குப் பாரடி சாத்துப்படி - நாம்
ஆடிடப் பழநியில் தீர்த்தமடி
வேண்டிடும் வரம்தரும் தீபமடி - இதில்
வேதனை இல்லையே லாபமடி (அப்பன்)

பழநிக்குப் போவதில் சுகம் அதிகம் - அவன்
பார்வையில் நிற்பதில் குணம் அதிகம்
விழுந்து வணங்கினால் வயததிகம் - அந்த
வீரன் தருவான் பணமதிகம் (அப்பன்)

முருகப்பனில்லாத ஊருமில்லை - ஒரு
முத்தையனில்லாத வீடுமில்லை
பழநியப்பனின்றி வம்சமில்லை - எங்கள்
பரம்பரைக் கவனின்றி அம்சமில்லை (அப்பன்)

கால் நடைப் பயணத்தில் ஓடிவந்தோம் - உன்
கருணைக்குத் தானுவைத் தேடிவந்தோம்
வேலெமைக் காக்கட்டும் வேலவனே - உன்
விழிஎமைக் காக்கட்டும் நாயகனே (அப்பன்)

## பாசி படர்ந்த மலை

பாசி படர்ந்த மலை (முருகையா!)
பங்குனித்தேர் ஓடுமலை (முருகையா!)
ஊசி படர்ந்தமலை (முருகையா!)
உத்தி ராஷம் காய்க்குமலை! (முருகையா!)

அரோகரா முருகய்யா ஆறுமுக வேலய்யா
அரோகரா முருகய்யா வல்லக்கோட்டை முருகய்யா

மலைக்குள் மலை நடுவே
மலையாள தேசமப்பா - நீ
மலையாள தேசம் விட்டு - உன்
மயிலேறி வருவா யப்பா (முருகையா!)
அரஹரோஹரா

அந்த மலைக்குயர்ந்த மலை
ஆகும் பழனிமலை- நான்
ஏறுவேன் உன் சந்நிதிமுன்! (முருகையா!)
அரஹரோஹரா

ஏறாத மலைதனிலே - நான்
ஏறிநின்று தத்தளிக்க - நீ
பாராமல் கை கொடுப்பாய்
பழனிமலை வேலவனே! (முருகையா!)
அரஹரோஹரா

அஞ்சிகை கொஞ்சிவர - உன்
அழகுசடை மேற்புரள- உன்
குஞ்சுசடை மேதினிலே - ஒரு
குயிலொன்று கூவுதப்பா! (முருகையா!)
அரஹரோஹரா

வேலெடுத்து கச்சைகட்டி
விதவிதமாய் மயிலேற
கோலா கலத்துடனே
குழந்தை வடி வேலவனே! (முருகையா!)
அரஹரோஹரா

உச்சியில் சடை யிருக்க
உள்ளங் கையில் வேலிருக்க
நெற்றியில் திரு நீறிருக்க
நிலை யுமைய்யா இவ்வூரில்! (முருகையா!)
அரஹரோஹரா

# ஸ்ரீ பழனியாண்டவர் திருப்பதிகம்

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்

மோதகம் நிவேதனம், மூஷிகம் உன் வாகனம்
முறங்கள்போல் செவித்தலம், வரம்கொடுக்கும் ஐங்கரம்
போதகம், கஜானனம், புராணஞான வாரணம்
போற்றி போற்றி உன் பதம் காக்க வேண்டும் என்குலம் (வேல்)

வேல்பிடித்தகையிலே செங்கோல் பிடித்து நின்றவா!
வேண்டிவந்த யாவையும் விரைந்தளிக்கும் மன்னவா !
கால் பிடித்தேன், என் மனக் கலக்கம் நான் உரைக்க வா?
கண்திறக்க வேண்டும் வேண்டும் தென் பழநி ஆண்டவா! (வேல்)

எனது பக்கம் நீயிருக்க எங்கிருந்து பகைவரும் ?
யானிருந்த மனை நடுங்க எவ்விதம் துயர்வரும்?
மனது நொந்து நொந்து வந்த மைந்தனை நீதாங்கவா
வாழி வாழி தென்பழநிக் கோவில் கொண்ட ஆண்டவா! (வேல்)

ஆதிநாளில் சூரனை அழித்த தெய்வம் நீயெனில்
அடுத்து வந்த பகையெலாம் முடித்த துண்மை தானெனில்
மோதிநிற்கும் என் பகை முடிக்கவேல் எடுத்துவா
முருகனேதென் பழநிகொண்ட அழகனே என் ஆண்டவா! (வேல்)

பன்னிரண்டு கைத்தலத்தில் பளபளக்கும் ஆயுதம்!
பாய்ந்து செல்லத் துடிதுடிக்கும் பச்சைமயில வாகனம்!
இன்னல் செய்யும் பகை முடிக்க இன்னும் என்ன தாமதம் ?
என்னையாளும் மன்னனான தென்பழனி ஆண்டவா! (வேல்)

ஈசனே உன் மனைவி பேரும் தேவசேனை என்கிறார்!
இன்னொருத்தி விழியிரண்டும் ஈட்டியென்று சொல்கிறார்!
வாசம் செய்யும் இடமெலாமுன் பாசறைகள் அல்லவா?
மைந்தனென் பகைமுடிப்பாய் தென்பழநி ஆண்டவா? (வேல்)

எம்பிரானே ஒன்பதுபேர் தம்பிமாரை நம்பினேன்
எனது காவல் இவர்கள் என்று கவிதைபாடிச் சொல்கிறேன்!
நம்பினாரைக் காக்கவேறு நாதன் ஏது சண்முகா?
நவிலொனாப் பகை முடிப்பாய் பழநிமலை ஆண்டவா! (வேல்)

ஆறுபடை வீடிருக்க வேறுபடை ஏனடா?
அழிக்கொணாத கோட்டை நின் சடக்கரங்கள்தானடா ?
மாறிலாத கவசமாய் வரும் சுழன்று வேலடா?
வல்வினை பகைமுடிப்பாய் தென்பழநி ஆண்டவா! (வேல்)

ஆரவார மாய் எழும் அகப்பகை புறப்பகை
அறியொனாத மந்தர யந்தர தந்திரமாய் வரும்பகை
வேர் விடும் குலப்பகை வினைப்பகை கிரகப்பகை
வேறுபல பகைமுடிப்பாய் வேல்பழநி ஆண்டவா (வேல்)

எந்த வேளையான போதும் கந்தவேளைப் பாடுவேன்!
இந்த வேளை உன்னையன்றி எந்த ஆளை நாடுவேன் ?
வந்தவேளை நல்ல வேளை வாகைகொண்ட வேலவா
வன்பகை ஒழித்தருள்வாய் தென் பழநி ஆண்டவா! (வேல்)

அப்பனே அடைக்கலம் என் ஐயனே அடைக்கலம்
அமரர் கோன் பகை முடித்த அண்ணலே, அடைக்கலம்
எய்ப்பிலே சரண்புகுந்தேன் ஈசனே அடைக்கலம்
என்பகை முடித்தருள்வாய் தென் பழனி ஆண்டவா! (வேல்)

## *கந்தனிடம் கையேந்துங்கள்*

கந்தனிடம் கையேந்துங்கள் அவன்
கண்கலங்க வைப்பது இல்லை
சொந்தமுடன் கேட்டுப்பாருங்கள் - அவன்
சுகம் நல்க மறுப்பது இல்லை (கந்தனிடம்)

தொல்லையென்று உம்குரலைக் கொள்ளாதவன்
தூய அன்பு நெறியை என்றும் தள்ளாதவன்
அல்லல் பட்டு அழும் நீரைத் துடைக்கின்றவன்
அழகுமயில் மீதிலேறி அணைத்துக் காப்பவன்
(கந்தனிடம்)

நேசமுடன் கேட்பவர்க்கு நிறையத்தருபவன்
நீதிநெறி மாறியோரை குறைய வைப்பவன்
வேசம் போட்டு ஏய்ப்போரை வெறுக்கின்றவன்
விடிவெள்ளி போல வந்து உதவுகின்றவன் (கந்தனிடம்)

அல்லல்படும் மனிதர்களே அயராதீர்கள்
ஆறுமுகன் பேரருளை மறவாதீர்கள்
வள்ளலிடம் குறையனைத்தும் சொல்லிகேளுங்கள்
வாரி வாரித் தருவதேற்கேவழியில் நிற்பவன்
(கந்தனிடம்)

மலையினிலும் அலையினிலும் வாழுகின்றவன்
மாநிலத்தை என்றும் நன்றாய் ஆளுகின்றவன்
கலையினிலும் சிலையினிலும் கனிந்து நிற்பவன்
கன்னித்தமிழ் பாட்டுக்கென்றும் பணிந்து வருபவன்
(கந்தனிடம்)

வள்ளி தெய்வயானையோடு காட்சி தருபவன்
வையாபுரி சரவணத்தை ஆட்சி செய்பவன்
எல்லையில்லாப் பெரும்பொருளை அள்ளித்தருபவன்
ஏழைகளின் துயரனைத்தும் கிள்ளி எறிபவன் (கந்தனிடம்)

## *தென்பழநி ஆலயம்*

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல் வேல்

தென்பழநி ஆலயம்
தேவ தேவன் கோபுரம்
அன்பழகன் சந்நிதியில் வைபோகமாம்! -அவன்
அடியார்கள் கொண்டாடும் தைபூசம்மாம்

ஆறெழுத்து மந்திரம்
அங்கமெல்லாம் சந்தனம்
நீறெடுத்துப்பூசிவரும் திருக்கூட்டமாம்! -அதன்
நெஞ்சமதில் ஆடிவரும் சதிராட்டமாம்

ஆலவட்ட தோரணம்
அன்னதானம் பானகம்
காலெடுத்துவைக்க வைக்க உபச்சாரமாம்!-இது
தென்பழநி தண்டபானி தரும் யோகமாம்!

கற்பூர தீபமாம்
கண்கவரும் ரூபமாம்
தற்பரனாய் நிற்பவனே நம்தெய்வமாம்!-அந்தச்
சரவணனைப் பாடுவதே பேரின்பமாம்!

பழனிமலை வாசனே
பஞ்சாமிர்த நேசனே
அழகுமயில் வாகனத்தில் வருவாயப்பா! - எங்கள்
அல்லல்களைப் போக்கிநலம் தருவாயப்பா!

## ஆறுபடை வீடுகள்

ஆறுபடை வீடுகள்
அழகுமலை நாடுகள்
ஏறுமயில்ஏறுபவன் அரசாங்கமாம்!-அவன்
இசைபாடி ஆடுபவன் புகழோங்குமாம்!

தேவானை திருமணம்
தேவர்தரும் சீதனம்
பாவாணன் நக்கீரன் அருட்கவி மன்றம்! - முதல்
படைவீடு மதுரையிலே திருப்பரங்குன்றம்

வடிவேலை வீசுவான்
வாகைமலர் சூடுவான்
அடியார்கள் புலவோர்கள் நெஞ்சில் வாழ்பவன்! - அவன்
அலையாடும் கடலோரம் செந்தில் ஆண்டவன்!

தண்டாயுதம் ஏந்துவான்
ஜபமாலை தாங்குவான்
கொண்டாடும் கவிமாலை அடிசூடுவான்! - எழில்
கூத்தாடும் பழநியிலே குடிஏறுவான!

சிவஞான சுந்தரம்
செவியோடு மந்திரம்
உபதேசக் குருநாதன் சாமிநாதன்! - அவன்
உலகாளும் சக்தி - சிவ காமிபாலன்!

அடிவாரம் மாமனாம்
மலைமேலே மருகனாம்
இடையினிலே ரகுராமன் உறவினர்சேனை! - அது
எம்பெருமான் விளையாடும் பழமுதிர்சோலை!

வள்ளிமலை, வடமலை,
மருதமலை, சிவமலை
கொல்லிமலை, பொதிகைமலை பற்பலமலைகள்! - ஐயா
குமரமலை, தணிகைமலை கற்பகச்சுனைகள்!
தண்ணீர்மலை முருகனே,
தைப்பிங்கல் குமரனே

கண்ணபிரான் மருமகனே, கதிர்காமனே! - ஏழு
கடல்தாண்டி லண்டனிலே சிவபாலனே!

போதுமய்யா சோதனை
பொறுக்கவில்லை வேதனை
ஆதரித்துக் காப்பாற்றத் தாமதம் ஏனோ? - என்
அல்லல், வினை, நோய் உனக்குச் சம்மதம் தானோ!

ஆறுமுக வேலனே
அழகுமயில் வீரனே
ஏறுமுகம் நீதருவாய் பழநிமலையிலே! - இனி
எப்போதும் துணைவருவாய் எமது வழியிலே!

வைத்தீசன் மைந்தனே
வயலூரில் கந்தனே
தைப்பூசம் காணவந்தோம் தண்டபாணி! - நீ
தங்கரதம் ஏற வேண்டும் எங்கள் சாமி!

அருணகிரி தோழனே
அடியவர் சகாயனே
சரணம் உன்னை அன்றி இல்லை சண்முகநாதா? - துணை
தந்துமனை, மக்கள், சுற்றும், எம்குலம் நீகா!

## *சாய்ந்தாடு*

வேல் வேல் முருகா வேல்முருகா
வேல் வேல் முருகா வேல்முருகா
வேல் வேல் முருகா வேல்முருகா
வேல் வேல் முருகா வேல்முருகா !!

சாய்ந்தாடு முருகே சாய்ந்தாடு
சந்தன குடமே சாய்ந்தாடு
கோல மயிலே சாய்ந்தாடு
கொஞ்சும் புறாவே சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

நெற்றியில் பிறந்த நித்திலமே
நீரினில் வளர்ந்த சித்திரமே
சுற்றிச் சுற்றி வருகின்றோம்
சுந்தர மயிலே சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

கார்த்திகைப் பெண்கள் பாலூட்ட
கன்னித் தமிழால் தாலாட்ட
கீர்த்தி மிகவும் கொண்டவனே
சித்திரை நிலவே சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

பிரணவப் பொருளை அறிந்தவனே
பிரம்மனைத் திருத்தும் பேரறிவே
சரவணப் பொய்கை வாழ்பவனே
சண்முக சிவனே சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

தந்தைக்கு மந்திரம் சொன்னவனே
தாயாய் அன்பைப் பொழிபவனே
மந்திரப் பொருளே மரகதமே
மடிமேல் ஏறி சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

அண்ணன் வயிறோ பெரிதாகும்
அவனே கனியை உண்ணட்டும்
பின்னால் உனக்கு உதவிடுவான்
பொன்னே மணியே சாய்ந்தாடு (சாய்ந்தாடு)

வெண்ணெய் தருவான் மாமனுமே
வேலைத் தருவாள் அன்னையுமே
பண்பைத் தருவான் அப்பனுமே
பாடல் தருவோம் நாங்களுமே! (சாய்ந்தாடு)

சிட்டே சிமிழே முருகய்யா
செந்தூர் வாழும் கந்தய்யா
எட்டுக்குடியா வேலய்யா
ஏரகத் துரையே சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

அன்பும் பண்பும் வளர்ந்திடவும்
ஆணவம் பொய்யும் நீங்கிடவும்
இன்பம் உலகில் நிலைத்திடவும்
வல்லக்கோட்டை முருகா சாய்ந்தாடு! (சாய்ந்தாடு)

## ஓம் என்னும் மந்திரம்

ஓம் என்னும் மந்திரமே வா வா ஷண்முகா
ஓம்கார சக்தியே நீ வா ஷண்முகா

சக்தியின் புதல்வனே நீ வா வா ஷண்முகா
சம்பந்தனாய் ஆனவன் நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

சமயபுரதாள் தாயின் மைந்தா வா வா ஷண்முகா
சங்கரியின் புதல்வனே வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

சரவணபவனே நீ வா வா ஷண்முகா
சண்முகக் கடவுளே நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

கருமாரியின் கண்ணே நீ வா வா ஷண்முகா
கார்த்திகை மைந்தனே நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

ஆனைமுகன் சோதரனே வா வா ஷண்முகா
ஆறுமுகக் கடவுளே நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

அம்பிகையின் பாலனே நீ வா வா ஷண்முகா
அழகு மயிலேறியே நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

பச்சைமயிலேறியே நீ வா வா ஷண்முகா
பக்தரை காக்க வேணும் நீ வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

நீலமயிலேறியே நீ வா வா ஷண்முகா
நீதியை காக்க வேணும் வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

வள்ளிமண வாளனே வா வா ஷண்முகா
வந்தவினை தீர்க்க வேணும் வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

திருத்தணி முருகனே நீ வா வா ஷண்முகா
தீராதோ என்தாபம் வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

திருச்செந்தூர் முருகனே நீ வா வா ஷண்முகா
தீருமய்யா என்கவலை வா வா ஷண்முகா
(ஓம் என்னும் மந்திரமே)

## ஆடிவரும் வேல்

குன்றுதோர் ஆடிவரும் குமரனோட வேலு இது (2)
கூடிவரும் பக்தர்களின் குறைதீர்க்கும் வேலு இது (அரோகரா)

மயூர வாகனனின் மரகத வேலுஇது (2)
மருதமலை ஆண்டவனின் மகத்தான வேலு இது (அரோகரா)

கார்போல பொழிகின்ற கார்த்திகேயன் வேலு இது (2)
கூறும் அடியார்கள் வினை தீர்க்க வரும் வேலு இது (அரோகரா)

சங்கடங்கள் தீர்க்கவரும் சண்முகனின் வேலு இது (2)
தண்டனைகள் அகற்றிவிடும் தண்டபாணி வேலு இது! (அரோகரா)

குன்றக்குடி தனிலே குடியிருக்கும் வேலு இது (2)
மன்றம் விளங்கவரும் மன்னனோட வேலு இது (அரோகரா)

பழநிமலை நோக்கிப் பறந்து வரும் வேலு இது (2)
கழனியிலே நிற்போரின் கண்துடைக்கும் வேலு இது! (அரோகரா)

ஊஞ்சலிலே ஆடிவரும் ஓம்கார வேலு இது (2)
மாஞ்சோலை வாழுகின்ற மன்னனோட வேலு இது (அரோகரா)

அடையாளம் காட்டிநிற்கும் அழகான வேலு இது (2)
கடையாணி இல்லாமல் கரைசேர்க்கும் வேலு இது! (அரோகரா)

வையாபுரியோரம் வந்து நிற்கும் வேலு இது (2)
வாழ்வாங்கு வாழவைக்கும் வல்லக்கோட்டை வேலு இது (அரோகரா)

எட்டுக்குடி நகருக்குள் எழுந்தருளும் வேலு இது (2)
கட்டிவரும் காவடியில் காட்சிதரும் வேலு இது (அரோகரா)

சிக்கல்நகர்தனிலே சிரித்துவாழும் வேலு இது (2)
எக்கலைக்கும் மன்னனான நம்தலைவன் வேலு இது (அரோகரா)

அண்டிவந்த பேருக்கெல்லாம் அபயமளிக்கும் வேலு இது (2)
கண்டி கதிர்காமத் தோனின் கனிவான வேலு இது! (அரோகரா)

## ஓடி வரவேணும் முருகா!

ஓடி வரவேணும் முருகா - வேலெடுத்து
ஆடிவர வேணும் முருகா - இங்கே
ஓடிவர வேணும் முருகா - வேலெடுத்து
ஆடிவர வேணும் முருகா. . .

ஆடிவருங் காவடியின்
அழகினையே கண்டிடவே
மலைப்பழனி வேலவரே
மலை இறங்கி இங்கே இப்போ (ஓடி)

பக்தரெல்லாம் ஒன்று கூடிப்
பாற்குடங்கள் தானெடுத்துப்
பழனிமலை ஏறிவரும்
பரவசத்தைக் கண்டிடவே (ஓடி)

பாலோடுத் தேனோடும்
பஞ்சாமிர்தம் சேர்ந்தோடும்
சீலமிக்கப் மலைப்பழனி
சிவகொழுந்தே இங்கே இப்போ (ஓடி)

சிரஞ்சீவி ஆனவரே
செல்வசுகம் தருபவரே
குறிஞ்சிமலர் தானசையக்
குமரய்யா இங்கே இப்போ (ஓடி)

பாளைச் சிரிப்பழகா
பரங்குன்ற பேரழகா
சீமைச் சமர்த்தழகா
செவ்வேளே இங்கே இப்போ (ஓடி)

ஆறுதலைத் தந்தருலி
அன்பர்நலங் காத்தருள
ஆடுமயில் விட்டிறங்கி
ஆறுமுகா இங்கே இப்போ (ஓடி)

அப்பனுக்குப் பாடஞ்சொல்லி
அதிர்ஷ்டக்காரப் பிள்ளையாகி
சுப்பனென்ற பேருங்கொண்ட
சுவாமிநாதா இங்கே இப்போ (ஓடி)

வெள்ளைத் தாடிக் கிழவனாகி
வேடம்பல போட்டு ஆடி
வள்ளியம்மை கைபிடித்த
வடிவேலா இங்கே இப்போ (ஓடி)

ஞானப்பழம் ஆனவரே
நாவல்பழம் தந்தவரே
சேவல்கொடி கூவிவரச்
செந்தூரா இங்கே இப்போ (ஓடி)

ஆறுக்காலு சவுக்கையிலே
அருளாடி உருவினிலே
பிரம்பெடுத்து ஆடுகின்ற
பேரழகே இங்கே இப்போ (ஓடி)

ஊஞ்சலிலே ஆடுகின்ற
உத்தமனே உன்பெருமை
பாட்டாலே சொல்லுகின்றோம்
பழனியப்பா மனமகிழ்ந்து (ஓடி)

பாட்டினிலே சுகங்காணும்
பாலகனே பழனிப்பா
எண்ணமெல்லாம் உன்னிடந்தான்
எழில்முருகா மனமகிழந்து (ஓடி)

## *மயிலாட்டம்*

வெற்றி வடிவேலவனை வேங்கைமரமானவனை
வெண்பாவில் பாடுங்கடி ஒயிலாட்டம். அந்த
வேழமுகன் தந்திடுவான் மயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

திருத்தணிகை வேலவனை தென்பழனி பாலகனை
கூவிக்கூவி ஆடுவது மயிலாட்டம் - இங்கே
கோலடித்து ஆடுவது ஒயிலாட்டம்.
(கந்தனுக்கும் வேல்)

எங்கள் வடிவேலவனாம் கந்தவடி வேலவனாம்
காவடிகள் ஆடுவது மயிலாட்டம். இங்கே
கால் மாறி ஆடுவது ஒயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

பச்சைமயில் பவளமயில் இச்சைதரும் இனியமயில்
அழகு மயில் ஆடுதய்யா மயிலாட்டம் - அங்கே
ஆறுமுக வேலவனின் ஒயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

நீலமயில் நாகமயில் துங்கமயில் தோகைமயில்
புள்ளி மயில் ஆடுதய்யா மயிலாட்டம் - இங்கே
துள்ளி துள்ளி ஆடுவது மயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

வெள்ளிமயில் தங்கமயில் முத்துமயில் மோகமயில்
வண்ண மயில் ஆடுதய்யா மயிலாட்டம் - இங்கே
வந்தவரும் ஆடுகிறார் ஒயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

பங்குனியில் உத்திரமாம் பால்குடமாம் காவடிகள்
எல்லோரும் செலுத்துவது அபிஷேகம் - அந்த
எட்டுக்குடி வேலனுக்கு அபிஷேகம்
(கந்தனுக்கும் வேல்)

வேலெடுத்து கச்சைகட்டி விதவிதமாம் மயிலோடும்
வெற்றி வடிவேலனது ஒயிலாட்டம்-இங்கே
வேகமாக ஆடுகிறார் மயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

சந்தணம் மணக்குதய்யா சங்கீதம் பெருகுதய்யா
சக்தியவள் மைந்தனது ஒயிலாட்டம் - அவள்
சன்னதியில் ஆடிடுவோம் மயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

வல்லக்கோட்டை பக்தர்களே தாவித் தாவி ஆடுங்களே
தங்கவடிவேலனது ஒயிலாட்டம் - பழனி
தண்டபாணி தந்திடுவான் மயிலாட்டம்
(கந்தனுக்கும் வேல்)

## ஒயிலாட்டம்

சரணகோஷம் போடுங்கய்யா சங்குநாதம் கேட்குதய்யா
சங்கரனின் மைந்தனது ஒயிலாட்டம் - அந்த
சண்முகனின் பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

உச்சியிலே சடையிருக்க உள்ளங்கையில் வேல் இருக்க
மால் மருகன் முருகனது ஒயிலாட்டம் இங்கே
மாதரெல்லாம் ஆடுவது மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

தேவர்களின் துயர்தீர்த்த தெய்வயானை மணவாளன்
திருத்தணிகை வேலனது ஒயிலாட்டம்-அடியார்
தினம் தினமும் கண்டிடவே மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

வேடனாக வேஷமிட்டு வேட்டையாடி வேவு பார்த்து
வெற்றிகண்டான் கிழவனாக ஒயிலாட்டம் - அங்கே
வள்ளிதன்னை மணம் புரிந்தான் மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

வேலவனை நம்பிடுவோம் வேதனையை சொல்லிடுவோம்
வேண்டும் வரம் தந்திடுவான் மயிலாட்டம் - நாம்
வெற்றியுடன் ஆடுவது ஒயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

துள்ளி துள்ளி ஆடிடுவோம் துஷ்டர்களை வென்றிடுவோம்
எங்கள் வடிவேலனுக்கு மயிலாட்டம் - இங்கே
எல்லோரும் ஆடுவது ஒயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

சர்க்கரையாம் காவடிகள் சண்முகனைக் கண்டிடவே
சதுராட்டம் ஆடுதய்யா ஒயிலாட்டம் - அவன்
சன்னதியில் ஆடுதய்யா மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

குன்றுகளில் குடியிருப்பான் குறைகளெல்லாம் தீர்த்திடுவான்
கூட்டமாக ஆடிடுவோம் ஒயிலாட்டம் - அவனை
கும்பிட்டருள் பெற்றிடுவோம் மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

தென்பழனி வேலவனே தெருத்தெருவாய் நடந்து வாரோம்
வறுமையெல்லாம் தீர்ந்திடவே மயிலாட்டம் - இங்கே
வரிசையாக ஆடுவது ஒயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

தந்தனத்தான் பாடுங்கோ தானமிட்டு ஆடுங்கோ
கந்தனவன் ஆடுவது ஒயிலாட்டம் - நம்ம
காலில் வலிதீர்த்திடவே மயிலாட்டம் (கந்தனுக்கும் வேல்)

# மயிலாட்டம் - ஒயிலாட்டம்

கந்தனுக்கும் வேல்வேல்
முருகனுக்கும் வேல்வேல்

பச்சைமயில் வாகனம்
பச்சைவள்ளி மோகனம்
கச்சைகட்டி ஆடுங்கடி ஒயிலாட்டம்
கால் மாறி ஆடுங்கடி மயிலாட்டம் (கந்தனுக்கு)

தெய்வானை கண்ணரசி
தேவேந்திரன் பெண்ணரசி
பூமகளின் மருமகனே ஒயிலாட்டம்
புண்ணியத் தவசீலனே மயிலாட்டம் (கந்தனுக்கு)

பச்சைமலை பவளமலை
இச்சைமலை பழநிமலை
இன்பமலை எமது நிலை ஒயிலாட்டம்
ஏகபோக தரிசனமாம் மயிலாட்டம் (கந்தனுக்கு)

தங்கப் புள்ளி அங்கமது
தாவித் தாவி ஆடுவது
எங்களது முருகனுக்கு ஒயிலாட்டம்
எல்லையற்ற பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

கொண்டை குலுங்குதடி
கூவியே ஆடுதடி
மண்டலமே மயங்குதடி ஒயிலாட்டம்
மாலவனும் மயங்குகிற மயிலாட்டம் (கந்தனுக்கு)

முத்துநகை மோக நகை
பித்துநகை பெரிய நகை
சித்து களாம் செந்திலவன் ஒயிலாட்டம்
சிங்காரவேலனுக்கு மயிலாட்டம் (கந்தனுக்கு)

குலுங்கிச் சிரிக்குமிந்த
குழந்தை ஏறி நின்று
அலுங்காமல் ஆடுதய்யா ஒயிலாட்டம்
ஆனந்தக் காட்சியம்மா மயிலாட்டம் (கந்தனுக்கு)

சலங்கை குலுங்குதம்மா சங்கீதம் பாடுதம்மா
நலுங்காமல் ஒலிக்குதம்மா ஒயிலாட்டம்
நாயகனின் பேரருளே மயிலாட்டம் (கந்தனுக்கு)

உடம்புக்குள் ஆடுவதும் உயிராக கூடுவதும்
கடம்பனின் பேரருளே ஒயிலாட்டம்
கந்தனின் பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

விராலிமலை பழனிமலை விரும்புகின்ற ஆறுபடை
வெற்றியுடன் ஆடுகின்ற ஒயிலாட்டம்
வேண்டும்வரம் தந்திடுமே மயிலாட்டம் (கந்தனுக்கு)

பன்னீர் மணக்குதய்யா கண்ணீர் பெருகுதய்யா
எந்நேரம் நீவருவாய் ஒயிலாட்டம்
எல்லையில்லா பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

சிந்துகளோ செந்தூரோ முந்துங்களே பக்தர்களே
வந்து வந்து ஆடுகின்றான் ஒயிலாட்டம்
வரம்தரவே கூடுகின்றான் மயிலாட்டம் (கந்தனுக்கு)

தந்தனத் தான் பாடுகின்றான் தாளமிட்டு கூடுகின்றான்
கந்தனவன் ஆடுகின்றான் ஒயிலாட்டம்
கற்பனையை பாடுங்களேன் மயிலாட்டம் (கந்தனுக்கு)

கந்தனுக்கு வேல்வேல்
முருகனுக்கு வேல்வேல்

## *சொல்லச் சொல்ல நாவினிக்கும்*

வேல் வேல் முருகா வேல்முருகா
வேல் வேல் முருகா வேல்முருகா

சொல்லச் சொல்ல நாவினிக்கும்
சொக்கும் கண்கள் நீர்துளிக்கும்
கல்லும் கனிந்து கவிப டைக்கும்
காடும் மேடும் கமகமக்கும்
அல்லும் பகலும் ஓதுகிறேன்
அய்யா, உன்னைப் பாடுகிறேன்
கொல்லும் கவலை களைவோனே!
குன்றக் குடியில் முருகோனே!
(வேல் வேல்)

வேறு கடவுள் நினைந்தறியேன்
வேறு கோவில் பணிந்தறியேன்
வேறு கல்வி பயின்றறியேன்
வேலும் மயிலும் மறந்தறியேன்
தேறி என்னைத் தெளியாயோ?
சிறிதும் கருணை புரியாயோ ?
கூறும் அடியார் துணைவோனே!
குன்றக்குடியில் முருகோனே! (வேல் வேல்)

தேனும் பாலும் நதியோடும்
சிதறும் தேங்காய் மலையாகும்
கூனும் நிமிர்ந்து குதிபோடும்
குருடும் செவிடும் குறைதீரும்
வானும் மண்ணும் துதிபாடும்
வருவார் பண்டை வினைமாறும்
கோனும் தானாய் வளர்வோனே!
குன்றக்குடியில் முருகோனே!

(வேல் வேல்)

மருது பூபன் பேர் சொல்லும்
மலையில் விளங்கும் சித்திரமே!
கருத இனிக்கும் கற்பகமே!
காலம் கடந்த தத்துவமே!
வருதி, வருதி என வழங்க
மணிவாய் திறந்த பெட்டகமே!
குருதிச் செம்பூப் புனைவோனே!
குன்றக்குடியில் முருகோனே!

பகழிக் கூத்தன் கவிதைகளில்
பாதச் சதங்கை பதித்தாயாம்!
புகழும் பாம்பன் அடியவன்பால்
புள்ளி மயில்மேல் குதித்தாயாம்!
நெகிழும் என்முன் கூத்தாட
நினையா தெங்கே ஒளிந்தாயாம்
குகனே, திருமால் மருகோனே!
குன்றக் குடியில் முருகோனே!

வடலூரராக்குக் கண்ணாடி
வள்ளல் உனது முகம்காட்டும்!
கடல்போல் கல்விக் கச்சியப்பர்
கவி ஏடுன்கை நலன் காட்டும்!
அடியேன் மனமோ பேய்காட்டும்!
அது, எந் நாள் உன் தாள் காட்டும் ?
குடநீர் ஆடும் குமரோனே!
குன்றக் குடியில் முருகோனே!

இழியும் காமம் ஓவியமாய்,
இசையாய், கதையாய் விலையாகும்!
பழியும், வெறியும், அரசியலாய்
பார்எங் கணுமே அலைமோதும்!
அழியும் உலகைக் காவாயோ?
அறிவுத் திருந்த வாராயோ ?
கொழிசெந் தமிழன் இறைவோனே!
குன்றக்குடியில் முருகோனே!

துணிவோ - மார்பில் தாக்குவதாம்!
சுகமோ - திருடித் தேக்குவதாம்!
உணவோ - நஞ்சில் ஊறியதாம்!
உள்ளும் புறமாய் நாறியதாம்!
அணுவும் பணமும் ஆயுதமாம்!
அகிலம் என்று வாழுவதாம்!
குணமே விழையும் அழகோனே!
குன்றக் குடியில் முருகோனே!

திருமா முகங்கள் ஓராறும்,
திருக்கண், திருக்கை ஈராறும்,
இருமா தரும், என் கலிதீர
ஏறும் மயிலும், சேவலுமாய்ச்
செருமா உகைக்கும் வேலோடு -
சேராய் தண்டைக் காலோடு!
குருமா மணியின் குடையோனே!
குன்றக்குடியில் முருகோனே!

உச்சி குளிர, உடல் குளிர
உருகும் அடியார் களி பெறுக
பச்சைமயிலும் வேலோடும்
பன்னீர் ஆடும் பெருமானே!
அச்சம் அகற்றி என்னையும் உன்
ஆளாய்க் கொண்ட தலைவோனே
கொச்சைத் தமிழும் அணிவாயோ -
குன்றக்குடியில் முருகோனே!

# வேலுண்டு வினையில்லை

வேலுண்டு வினையில்லை
மயிலுண்டு பயமில்லை
குகனுண்டு குறைவில்லை மனமே - எங்கள் (2)
கந்தன் உண்டு கவலையில்லை தினமே

உலகமெனும் கடல்தனிலே
உடலென்னும் ஓடமது (2)
உன்னடியை கரைசேர அருளுவாய் (2)
(வேலுண்டு)

ஊனுடம்பை வளர்ப்பதற்கு
ஒவ்வொரு நாளும் கழித்தேன் (2)
உன்னருள் வளர வழி உணர்கிலேன் (2)
(வேலுண்டு)

ஆறுபடை வீட்டினிலே (2)
ஆறுமுக வேலனே
ஆதரித்து எனையாளும் அய்யனே (2)
(வேலுண்டு)

ஓயாது ஒழியாது உன் நாமம் சொல்பவர்க்கு (2)
உயர் கதிதான் தந்திடுவாய் முருகா (2)
(வேலுண்டு)

நெஞ்சமதில் வஞ்சமின்றி (2)
நின்மலனே நின்னடியை
தஞ்சமென நெஞ்சமதில் எண்ணினேன் (2)
(வேலுண்டு)

திருப்பகழை பாடி உன் (2)
திருவடியை கைதொழுது.....
உன் அருளை பெற்றிடவே வந்தோம் (2)
(வேலுண்டு)

கருணையே வடிவமான
கந்தசாமி தெய்வமே (2)
உன் கழலடியை காணவேதான் வந்தோம் (2)
(வேலுண்டு)

## பழனி ஆண்டவர் பவனி

பழனி அண்டவர் பவனி வருகிறார் தங்கத் தேரினிலே......
நவ நவ பாஷானத்தால் உரு அமைத்தார் (2)
போகர் பெருமானே..........!
பழனி ஆண்டவர் பவனி வருகிறார் தங்கத் தேரினிலே

ஒரு கனிக்காய் உலகம் சுற்றிய
பழனி மலைக்கோவில் ........ அந்த (2)
சிவக் குழந்தாய் தண்டாயுதமே ஏந்திய திருக்கோவில் ..... அந்த
தவக்குழந்தாய் தண்டாயுதமே
ஏந்தியத் திருக்கோயில்.........! (2)
(பழனி ஆண்டவர்)

அழகு மயில் நடமாட அற்புத வேலாட.......... (2)
அன்னை பெரிய நாயகியுடனும்
அப்பனும் கூத்தாட ............ (2)
அன்பர்கள் துதிப்பாட ..........
அருணகிரி தமிழ்பாட ........... (2)
அரகர சிவ சிவ சரவண பவகுக (2)
(பழனி ஆண்டவர்)

பன்னீரில் அபிசேகம் ........ வெந்நீரில் அபிசேகம் (2)
பன்னீரில் அபிசேகம் ......... இளநீரில் அபிசேகம்
பாலோடு தேன் கலந்த பஞ்ஞாமிர்த அபிசேகம்
பாலோடு சந்தனமும் திருநீரில் அபிசேகம்

ராஜ அலங்காரம் ..... ஞானியின் தவக்கோலம் (2)
ராஜ அலங்காரம் ..... ஞானியின் திருக்கோலம்
அரகர சிவ சிவ சரவண பவகுக (2)

## பழனி வேலா

பாலனை போல் தோன்றுகின்ற பழனிவேலா
நீ.... பண்டாரமாய் நிற்பதேனோ பழனிவேலா
வேலை ஏந்தும் கைகளிலே பழனிவேலா (2)
வெறும் குச்சி மட்டும் இருப்பதேனோ பழனிவேலா

அப்பா உன்னை திட்டினாரோ பழனிவேலா (2)
அண்ணன் வம்பு செய்தாரோ பழனிவேலா
ஞான பழம் கூட கிடைக்கலையோ பழனிவேலா (2)
நீ உலகத்தையே சுற்றி வந்தாய் பழனிவேலா (பாலனை)

அம்மா உமா தேவியாரோ பழனிவேலா (2)
உன்னை அழகழகாய் அலங்கரிப்பார் பழனிவேலா
ஏனோ இந்த கோலமப்பா பழனிவேலா (2)
நீ ஆண்டியாக நின்றுவிட்டாய் பழனிவேலா (பாலனை)

தைபூசதிருநாளில் பழனிவேலா (2)
உனக்கு காவடிகள் தூக்கி வந்தோம் பழனிவேலா
ஒத்தயைடி பாதையிலே பழனிவேலா (2)
நாங்கள் உன்னை காண வருகின்றோமே பழனிவேலா (பாலனை)

உண்டி நிறைய பணமிருக்குது பழனிவேலா (2)
நல்ல உடைகள் தைத்து போட்டாலென்ன பழனிவேலா
ஏனோ இந்த கோலம் அப்பா பழனிவேலா (2)
நீகோவணத்துடன் நின்று விட்டாய் பழனிவேலா (பாலனை)

கூடவந்த மயிலும் எங்கே பழனிவேலா (2)
உன் கோபத்தாலே ஒடி போச்சோ பழனிவேலா
ஏனோ இந்த கோபமப்பா பழனிவேலா (2)
நீதனியாக நின்று விட்டாய் பழனிவேலா

மாமனோ கடனாளி பழனிவேலா (2)
உங்க அப்பனோ பரதேசி பழனிவேலா
நீயோ ரொம்ப சுகவாசி பழனிவேலா (2)
கொஞ்சம் எங்களையும் நீயோசி பழனிவேலா

(பாலனை)

விசாக திருநாளில் பழனிவேலா (2)
உனக்கு விதவிதமாய் அலங்காரம் பழனிவேலா
ஆறுபடை அரசனே நீபழனிவேலா (2)
எங்கள் யாத்திரையை ஏற்கவேணும் பழனிவேலா (பாலனை)

பரணி திருநாளில் பழனிவேலா (2)
உனக்கு தரணியெல்லாம் அபிசேகம் பழனிவேலா
ராஜ அலங்காரமப்பா பழனிவேலா (2)
எங்கள் ராஜாதி ராஜனே நீபழனிவேலா

(பாலனை)

வேலுண்டு வினையில்லை பழனிவேலா (2)
மயிலுண்டு பயமில்லை பழனிவேலா
நீயுண்டு எங்களுக்கு பழனிவேலா (2)
உந்தன் அருள் வேண்டும் என்றைக்குமே பழனிவேலா

(பாலனை)

கிருத்திகை திருநாளில் பழனிவேலா (2)
உன்னை அழகழகாய் அலங்கரித்தோம் பழனிவேலா
ஆசையாக அழைக்கிறோமே பழனிவேலா (2)
நீஅழகுமயில் ஏறி ஆடி வரணும் வேலா

(பாலனை)

ஆண்டு தோறும் உன்னை காண பழனிவேலா (2)
நாங்கள் பாதம் நோக நடந்து வாரோம் பழனிவேலா
கண்டால் சக்தி பிறக்குதப்பா பழனிவேலா (2)
எங்கள் தலைமுறையே சிறக்க வேண்டும் பழனிவேலா

(பாலனை)

வாசு குருசாமி
திருவெற்றியூர், சென்னை.

## சொக்கத்தங்க முருகனுக்கு அரகரோகரா

சொல்ல வேண்டும் சொல்ல வேண்டும் அரகரோகரா
சொக்கத்தங்க முருகனுக்கு அரகரோகரா

காலை மாலை வணங்க வேண்டும் கந்தன் சேவடி
கச்சிதமாய் தூக்க வேண்டும் புஷ்பக்காவடி
ஆலயத்தில் பாட வேண்டும் அழகன் பாவடி
ஆறுமுகன் திருமுகந்தான் வேதச்சாவடி (சொல்ல)

சிற்சில பேர் புத்தியிலே உண்டு நாத்திகம்
அதை மாற்றி, போவதற்கு ஏற்ற ஆலயம்
பற்பலவாய் தருவதற்கு வந்த சூத்திரம்
பழனி தண்டபாணியே கண்கண்ட வைத்தியம் (சொல்ல)

முருகனிடம் மனது வைத்தால் முத்து மாணிக்கம்
முகமலரும் அகமலரும் வைரக்கற்பகம்
வருந்துயரை போக்கிவிடும் மருந்து மாதவம்
வளர் பிறையாய் ஒளி விளங்க வந்த காவியம் (சொல்ல)

அவனிருக்க வினைகளேது பாடுங்கள் சாமி
அவனிடத்தில் பக்தி கொண்டு சுற்றுது பூமி
சிவன் இருக்க மகனிடத்தில் அத்தனை சக்தி
சீர் வளரும் முருகனிடம் எங்களின் பக்தி (சொல்ல)

கந்தவேலை வணங்கிடாமல் வேறென்ன வேலை
கந்தவேலை சொந்தமென்றால் அது நல்ல வேலை
அந்தரத்தில் ஆடுதே வாழ்கின்ற வாழ்க்கை
ஆறுமுகனால் வாழ்கின்றது நாம் கொண்ட வாழ்க்கை (சொல்ல)

மணங்கலென்னும் மலர்களாளே அர்ச்சனை செய்வோம்
மால் முருகன் அருளினாளே யாத்திரை செல்வோம்
வரும் வழியில் துயரிருந்தால் வாய்வழி சொல்வோம்
வந்து விடு திருமுருகா உன்னடி பணிவோம் (சொல்ல)

நாகாதன் குருசாமி
மண்ணிவாக்கம்- தாம்பரம்

## பழமாய் கருணை பொங்கும்

பழமாய் கருணை பொங்கும் பழனி மலை வேலவா
பரமனுக்கு வேதம் சொன்ன பரஞ்ஜோதி வேலவா
நிழலாய் உனை தொடர்வோம் நீதிஞான வேலவா
நித்தம் உன்னை பணிந்திடவே வரம் தா வேலவா
வாவா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

மல்லிகைப்பூ வாங்கி வந்ததோம் மரகத வேலவா
மலர் அடிகள் பணிந்திடவே வரம்தா வேலவா
முல்லை மலர் சரம்தொடுத்ததோம் முத்து மணி வேலவா
முழங்தாள் பணிந்திடவே வரம்தா வேலவா
வா வா வேலவா - வண்ணமயில் வேலவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

நாலுலட்சம் பூவளர்த்தோம் நாதவடி வேலவா
நாவில் உன்னை புகழ்ந்திடவே ஓடிவா வேலவா
நூல் எடுத்த நெஞ்சத்திலே நூதினப்பு வேலவா
நூதனமாய் நூத்திடவே வரம் தா வேலவா
வா வா வேலவா - வண்ணமயில் வேலவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

ஆடிவந்தோம், பாடிவந்தோம் அன்பு வடிவேலவா
அருள் மணக்க ஓடிவந்தோம் ஆடிவா வேலவா
கூடிவந்தோம் தேடிவந்தோம் குருபரனே வேலவா
கோடி மலர் பூத்திடவே வரம் தா வேலவா
வா வா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா
வேல் எடுத்த வேந்தனே
வெற்றி வடி வேலனே
நூல் எடுத்து பாடினேன்
நொடியினில் ஓடிவா
மால் எடுத்த மருகனே
மயில் எடுத்து ஆடிவா
கோல் எடுத்த ஆண்டியே
கோபம் விட்டு நாடிவா
வா வா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

உச்சி மீது ஆடுகின்ற உன்னை கண்டேன் வேலவா
உன்னை இன்றி வேறுதுணை யார் எனக்கு வேலவா
பச்சை மயில் ஏறிவரும் பைந்தமிழே வேலவா
பாடி உன்னை போற்றிடவே வரம் தா வேலவா

வா வா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

குன்றில் ஆடும் குமரனே
குறவள்ளி கந்தனே
கொண்டதென்ன கோபமோ
குறைகள் தீர்க்க ஓடிவா
தென் பழனி தெய்வமே
தெய்வ யானை நாதனே
தில்லை வேந்தன் மைந்தனே
திருவருளே ஓடிவா

வா வா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

பரமன் பரமன் என்ற பஞ்சசர வேலவா
பார் அனைத்து காப்பவனே பரம் பொருளே வேலவா
சரணம் சரணம் எனும் சதாசிவா வேலவா
சரவண சுடரே நீ ஓடிவா வேலவா

வா வா வேலவா - வண்ணமயில் ஏறிவா
வேல் வேல் வேலவா - வேல் எடுத்து ஆடிவா

# ஞானத்திற்கும் மோனத்திற்கும்

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்

முருகன் என்றசொல் நமக்கு மூமுலமந்திரம் அதைப்
பாடப்பாட நமக்கு வரும் வென்றிடும் திறம்
அழகு மகன் முருகன் ஆளும் அழகு பழனி மா மலை
அதற்கிணையாய் அவனிதனில் ஏதுமாமலை

(வேல்முருகா)

ஞானத்திற்கும் மோனத்திற்கும் விளக்கம் பழனியில்
நாடுநலம் அத்தனையும் கிடைக்கும் பழனியில்
தேனமுத அபிசேகம் தெய்வப் பழனியில்!
தேவனவன் காட்சியதோ தினமும் பழனியில்!

(வேல்முருகா)

திருப்புகழின் முழக்கமெல்லாம் மேவும் பழனியில்
தேவன் நாமம் சொல்லிக் குயில் கூவும் பழனியில்
விருப்புடனே தொழுபவர்க்கோ வெற்றி பழனியில்
விளங்கும் நெற்றிநீர் மணக்கும் வேந்தன் பழனியில்!

(வேல்முருகா)

ஆண்டுதோறும் உன்னைக் காண நடந்து வருகிறோம்
பழனி ஆண்டவனே நம்மை கோடி அடைந்து வருகிறோம்
வேண்டியது யாவும் பெற்று பெறுகி வருகிறோம்
எந்த வேளையிலும் உனை நினைத்தால் உருகிவிடுகிறோம்!

(வேல்முருகா)

உடலை நோக்கி வாழ்ந்திருந்தோம் திருந்தி வருகிறோம்
எங்கள் உயிருக்குயிர் நீஎனவே அறிந்து வருகிறோம்
கடலை நோக்கி நதிகள் நாங்கள் திரும்பி வருகிறோம்
மனக் கதவு திறந்து மனதில் உன்னை சுமந்து வருகிறோம்!

(வேல்முருகா)

கோடி செல்வம் வந்தபோதும் வந்திராது
மனக் கோனலிலே எந்த நாளும் கண்டிராதது
நிம்மதியாம் பெரிய செல்வம் ஒன்று தானது
அது நேர்ந்து வந்த காலமும் இன்று தானது!

(வேல்முருகா)

வழியெல்லாம் உனது நாமம் உனது நாமமே
எங்கள் வாய்கள் கூறும் வார்த்தை உந்தன் புகழதாகுமே
விழியெல்லாம் புனலாகும் புனலதாகுமே இங்கு
விளைவதெல்லாம் நலமதாகும் நலமதாகுமே

(வேல்முருகா)

கோடி கோடி நெஞ்சில் உண்டு கொட்டப்போகிறோம்
பொய்க் கோபம் வந்தால் செல்லமாக திட்டப் போகிறோம்
மாடிமேல மாடி வைத்து கட்டப்போகிறோம் உந்தன்
மகிமையினால் வானை சென்று முட்டப்போகிறோம்

(வேல்முருகா)

அள்ளி அள்ளிதுணையை அன்பில் அணைக்கப் போகிறோம்
உந்தன் ஆதரவில் திருமணங்களை முடிக்கப் போகிறோம்
வெள்ளி தங்கம் வைரம் என்று பேசப் போகிறோம்!
சும்மா மேளம் தாளம் கேட்டு கேட்டு மகிழப்போகிறோம்!

(வேல்முருகா)

கணபதிக்கு தம்பி இவன் மிகவும் நல்லவன்
காத்து நம்மை கரைசேர்க்க உதவும் வல்லவன்
பழனியிலே ஆண்டி எனும் பேரில் உள்ளவன்
எண்ணிப்பார்த்து பார்த்து உருகும் நெஞ்சஊரில் உள்ளவன்

(வேல்முருகா)

ஆவலோடு சேர்ந்து கொஞ்சம் வந்து பாருங்கள்
பழனி ஆண்டிப் புகழ் பாடி கொஞ்சம் வாழ்ந்து பாருங்க
படிப்படியாய் ஏறிச் சென்றால் அவனை பார்க்கலாம்
புண்ணிய பாவம் எனும் இரண்டு வினை சுமையை நீக்கலாம்

(வேல்முருகா)

மீண்டும் மீண்டும் பார்த்தது தான் பிறகு பார்க்கலாம்
மயில் மேலிருந்து வேலன் கொண்ட துறவு நோக்கலாம்
ஆண்டில் சில நாளையேனும் அவனுக் காக்கலாம்
கையில் அனலையேந்தி ஆடும் சிவன் மகனுக் காக்கலாம்

(வேல்முருகா)

பொறந்ததையா நல்லநேரம் எழுந்து பாருங்க
போய்வரலாம் பழனிமலை நடந்து வாருங்க
நடந்ததெல்லாம் நடந்ததையா மறந்து போடுங்க
இனி நடக்கப் போகும் காரியத்தை நினைச்சி வாழுங்க

(வேல்முருகா)

சேவல் கூவி அழைக்குது கண்திறந்து பாருங்கள் - அந்த
சிங்கார வேலன் புகழ் உணர்ந்து பாருங்கள் - அவன்
காவல் செய்யும் முருகன் மலை அருகில் தானுங்க - அந்த
கந்தன் பெயர் சொல்லி சொல்லி உறுகி ஆடுங்க

(வேல்முருகா)

ஆணும் பெண்ணும் கூட்டம் கூடிப் பாட்டுப் பாடுங்க
வரம் ஆறுமுக சாமியிடம் கேட்டு வாங்குங்க
வேணும் உந்தன் காட்சி என்று சொல்லி போடுங்க!
அவன்வேறு வார்த்தை சொல்ல வந்தா தள்ளி போடுங்க!

(வேல்முருகா)

தந்தனத்தான் தந்தனத்தான் தாளம் போடுங்க
அந்த சங்கரன் பெத்த பிள்ளைய பற்றி ராகம் பாடுங்க
கந்தனுக்கு நெஞ்சினுக்குள் கோலம் போடுங்க நம்
கண்ணில் வரும் நீரைக் கொண்டு பாலம் போடுங்க!

(வேல்முருகா)

1975ஆம் ஆண்டு சென்னை அம்பத்தூர் பூஜையில் குருசாமிக்காக உடன் இயற்றப்பட்டு குருசாமி ஐயா A.R.M. இலட்சுமணன், (நிறுவனர் அன்னதானக்குழு, வல்லக்கோட்டை) அவர்களால் உடன் மெட்டமைக்கப்பட்டு யாத்திரைக்குழுவின் உயிர்ப்பாடலாக இன்று வரையும், இனியும் தொடரும் குழுப்பாடல்.

## *எல்லாம் முருகன்*

எழும் போதும் வேலும் மயிலும் என்பேன் - எழுந்தே மகிழ்ந்து
தொழும் போதும் வேலும் மயிலும் என்பேன் - தொழுதே உருகி
அழும் போதும் வேலும் மயிலும் என்பேன் - அடியேன் உடலம்
விழும் போதும் வேலும் மயிலும் என்பேன் - செந்தில் வேலவனே

செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிறைத்த நல் பன்னிரு தோளும், பதும மலர்க்
கொங்கே தரளம் சொரியும் செங்கோடைக் குமரன் என
எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர் நிற்பனே

வல்லக் கோட்டையிலே முருகன் - நமக்கு
மகிழ்வோடு காட்சிதர மனைகளைத் தந்தான் வேல் வேல்

மனை தந்த முருகனைக் கண்டால் - அவன்
தனைநாடி வந்தவரின் துயரம் களைப்பான் வேல் வேல்

தணிகை மலையிலும் முருகன் - நம்மைத்
தாங்கிடும் வேதனை தீர்த்திடும் வேலன் வேல் வேல்

பழனி குன்றிலோர் ஆண்டி - அவன்
பாதத்தை வணங்கிடும் பக்தரோ கோடி வேல் வேல்

சென்னையில் எல்லோரும் கூடி - அந்த
சிங்கார வேலவனை தினம் தினம் வேண்டி வேல் வேல்

கார்த்திகை மாதத்தில் இருந்து - அந்த
கந்தனைப் போலவே ஆண்டியாய் ஆகி வேல் வேல்

ஆங்காங்கு பூஜைகள் செய்து - பழனி
ஆண்டவன் மகிமையை எண்ணியே பாடி வேல் வேல்

காவடிகள் எடுப்பவரும் உண்டு அவன்
கருணை வேண்டியே நடப்பவரும் உண்டு வேல் வேல்

பாக்களும் புதிதாகத் துவங்கும் - அதை
படித்தாலே மனத்துயர் தன்னாலே தீரும் வேல் வேல்

முதலாண்டு வருபவரும் முருகா - உந்தன்
மோகத்தில் ஆண்டாண்டு வருவாரே முருகா வேல் வேல்

புறப்படும் போது உள்ள மோகம் - உந்தன்
பொன்னான மேனியைக் கண்டாலே தீரும் வேல் வேல்

வல்லக்கோட்டையிலே இருந்து - உன்னைக்
கண்டிட வந்திடும் பக்தரோ கோடி வேல் வேல்

வல்லக்கோட்டை அன்பர்களும் கூடி - உந்தன்
திருவுருவம் காணவே வருவாரே முருகா வேல் வேல்

ஆசையாய் முதலாண்டு வருவார் - உந்தன்
பாசத்தால் பலருடன் பல்லாண்டு வருவார் வேல் வேல்

கால்நடை கொண்டவர்க்கு முருகா - உந்தன்
காட்சியை எப்போதும் தந்திடுவாய் முருகா வேல் வேல்

முத்திரை எடுத்தவர்க்கு முருகா - அவர்
முக்திபெற உன்னருளைத் தந்திடுவாய் முருகா வேல் வேல்

கால்வருடம் உனக்காக முருகா - பலர்
கணக்காக ஒதுக்கியுனை நாடி வரார் முருகா வேல் வேல்

முக்கால் வருடம் பணிபுரியும் அவர்க்கும் - நீயும்
முழுசாக பலன்தனை தந்திடுவாய் முருகா வேல் வேல்

வேண்டுதலை தீர்ப்பதற்கு முருகா - சொந்த
வேலைகளை விட்டு உனைநாடி வரார் முருகா வேல் வேல்

எல்லோரும் பழனியை அடைவோம் - நம்
எதிர்காலம் செழித்தோங்க அவனையே காண்போம்.
வேல் வேல்

அதைப்போல வல்லக்கோட்டை செல்வோம் - நாம்
அதனாலே இன்னும் பல நன்மைகளை அடைவோம்.
வேல் வேல்

கருணாலயம் குருசாமி
திருநீர்மலை - சென்னை

## கந்தன் தாலாட்டு

ஆராரோ ஆரிரரோ ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ ஆராரோ ஆரிரரோ
(ஆராரோ)

தாயரசி பார்வதியாள் தரவில்லை பாலென்று
தங்க மகன் அழலாமோ சண்முகனே கண்ணுறங்கு
(ஆராரோ)

ஒய்யாரப் பாற்குடங்கள் ஒரு கோடி தானெடுத்து
மெய்யன்பர் வருவார்கள் மீன் விழியே கண்ணுரங்கு
(ஆராரோ)

ஆடிவிளை யாடுதற்கு அழகுப் பொருளில்லையென்று
அழலாமோ வேலவனே ஆரமுதே கண்ணுரங்கு
(ஆராரோ)

ஆயிரமாமம் காவடிக்கள் ஆடிவரும் கூடிவரும்
ஆனந்தமாய் ஆடிடலாம் அழகமுதே கண்ணுரங்கு
(ஆராரோ)

மாம்பழத்தை அண்ணனுக்கு மாயவனும் தந்ததனால்
மயிலேறி வலம் வந்தவனே முருகா நீ கண்ணுறங்கு
(ஆராரோ)

தேன் கொட்டும் அபஷேகம் செங்கதலிப் பழச்சாறு
சேர்ந்து நிதம் குளித்திடலம் செவ்வேளே கண்ணுறங்கு
(ஆராரோ)

கொஞ்சி விளை யாடுதற்கு மஞ்சல் முக மில்லையென்று
கோமகனே அழலாமோ குமரவேலே கண்ணுறங்கு
(ஆராரோ)

வஞ்சிக் கொடி வள்ளியம்மை வாஞ்சைக் கிளி தெய்வயாணை
வந்திடுவார் கொஞ்சிடுவார் வடிவேலா கண்ணுறங்கு
(ஆராரோ)

ஏறுமயில் ஏறுவதற்கும் எங்கும் விளையாடுதற்கும்
ஏங்கியே நீ அழலாமோ எழிலரசே கண்ணுறங்கும்
(ஆராரோ)

ஆறுபடை வீடிருக்கும் அழகு மயில் நூறிருக்கு
ஆடிடலாம் பாடிடலாம் ஆறுமுகா கண்ணுறங்கும்
(ஆராரோ)

-குறள் இலக்குவன்.

## ஆறு படை சரணம்

### திருப்பரங்குன்றம்

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்னுற் றுனைநாளும்
கண்டுகொண்டன்புற் றிடுவேனோ
நந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டி கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே

### திருச்செந்தூர்

வரியார் கருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி
இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே
பரிபால னஞ்செய் தருள்வோனே
பரமேசு ரன்ற னருள்பாலா
அரிகேச வன்றன் மருகோனே
அலைவாய மர்ந்த பெருமாளே

### பழநி

அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனோ
இபமாமு கன்தனக் கிளையோனே
இமவான்ம டந்தையுத் தமிபாலா
ஜெபமாலை தந்தசற் குருநாதா
திருவாவி னன்குடிப் பெருமாளே

## திருவேரகம் (சுவாமி மலை)

காமியத் தழுந்தி யிளையாதே
காலர்கைப் படிந்து மடியாதே
ஓமெழுத் திலன்பு மிகவூறி
ஓவியத் தலந்த மருள்வாயே
தூமமெய்க் கணிந்த சுகலீலா
சூரனைக் கடிந்த கதிர்வேலா
ஏமவெற் புயர்ந்த மயில்வீரா
ஏரகத் தமர்ந்த பெருமாளே

## குன்று தோராடல்

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் தினிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே

## பழமுதிர்சோலை

காரணம தாகவந்து புவிமீதே
காலனணு காதிசைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞான நடமே புரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுக மாறிரண்டு விழியோனே
சூரர்கிளை மாளவென்ற கதிர்வேலா
சோலை மலை மேவி நின்ற பெருமாளே

*தேவராய ஸ்வாமிகள் இயற்றிய*

# <u>கந்தர் சஷ்டி கவசம்</u>

*நேரிசைவெண்பா*

துதிப்போர்க்கு வல்வினைபோம் ! துன்பம்போம் ! நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக் - கதித்தோங்கும்
நிஷ்டையும் கைகூடும், நிமலர் அருள் கந்தர்
சஷ்டி கவசம் தனை

*குறள் வெண்பா*

அமரர் இடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

மைய நடம்செய்யும் மயில் வாகனனார்
கையில் வேலால் எனைக் காக்கவென்று வந்து
வரவர வேலா யுதானர் வருக!
வருக! வருக! மயிலோன் வருக!

இந்திரன் முதலா எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக! வருக!
வாசவன் மருகா வருக! வருக!
நேசக் குறமகள் நினைவோன் வருக!

ஆறுமுகம் படைத்த ஐயா வருக!
நீறிடும் வேலவன் நித்தம் வருக!
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக!
சரவண பவனார் சடுதியில் வருக!

ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரஹண வீரா நமோ நம!
நிபவ சரஹண நிறநிற நிறென

வசர ஹணபவ வருக! வருக!
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக!
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்

பரந்த விழிகள் பன்னிரண்டு இலங்க
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக!
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையும் கிலியும்

கிலியும் சௌவும் , கிளரொளி ஐயும்
நிலைபெற் றென்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் நீயும், தனியொளி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன் தினம் வருக!

ஆறு முகமும் அணிமுடி ஆறும்,
நீறிடும் நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும், பவளச் செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்

ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறிரு திண்புயத் அழகிய மார்பில்
பல் பூஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

முப்புரி நூலும், முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்

இருதொடை அழகும் இணைமுழந் தாளும்
திருவடி அதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென

நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு, டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து!

எந்தனை ஆளும் ஏரகச் செல்வ !
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந்து உதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோத னென்று

உன்திரு வடியை உறுதியென்று எண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க !
என்னுயிர்க் உயிராம் இறைவன் காக்க !
பன்னிரு விழியால் பாலனைக் காக்க !

அடியேன் வதனம் அழகுவேல் காக்க !
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க !
கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க !
விதிசெவி இரண்டும் வேலவர் காக்க !

நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க !
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க !
முப்பது இருபல் முனைவேல் காக்க !
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க !

கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க !
என்னிளம் கழுத்தை இனியவேல் காக்க !
மார்பை இரத்ன வடிவேல் காக்க !
சேரிள முலைமார் திருவேல் காக்க !

வடிவே இருதோள் வளம்பெறக் காக்க !
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க !
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க !
பழுபதி னாறும் பருவேல் காக்க !

வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க !
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க !
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க !
ஆண்பெண் குறிகளை அயில்வேல் காக்க !

பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க !
வட்டக் குதத்தை வல்வேல் காக்க !
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க !
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க !

ஐவிரல் அடியிணை அருள்வேல் காக்க !
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க !
முன்கை இரண்டும் முரண்வேல் காக்க !
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க !

நாவில் சரஸ்வதி நற்றுணை யாக !
நாபிக் கமலம் நல்வேல் காக்க !
முப்பால் நாடியை, முனைவேல் காக்க !
எப்பொழு தும் எனை எதிர்வேல் காக்க !

அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க !
வரும்பகல் தன்னில் வஜ்ரவேல் காக்க !
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க !

ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க !
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க !
காக்க காக்க கனகவேல் காக்க !
நோக்க நோக்க நொடியில் நோக்க !

தாக்க தாக்கத் தடையறத் தாக்க !
பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம், வலாஷ்டிகப் பேய்கள்

அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம்மராட் சதரும்

அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலும் இருட்டிலும் எதிர்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோடு அனைவரும்,

விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளர்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந்து ஓடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்

பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீள்முடி மண்டையும்
பாவைக ளுடனே, பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்

ஒட்டியச் செருக்கும் ஒட்டிய பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட

மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாள் எனைக் கண்டால் கலங்கிட
அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட்டு அலறி மதிகெட்டு ஒடப்

படியினில் முட்டப் பாசக்கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்
கட்டு கட்டு கதறிடக் கட்டு

முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில்செதி லாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடிவேலால்

பற்று பற்று பகலவன் தணலெரி
தணலெரி தணலெரி தணல் அதுவாக
விடுவிடு வேலை வெருண்டது ஒடப்
புலியும் நரியும் புன்னரி நாயும்

எலியும் கரடியும் இனித் தொடர்ந்து ஒடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்து உயர் அங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க

ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் புருதி

பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்து அரனை பரு அரை யாப்பும்
எல்லாப்பிணியும் என்றனைக் கண்டால்

நில்லாது ஓட நீ எனக்கு அருள்வாய்
ஈரேழு உலகமும் எனக்கு உறவாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள் அரசரும் மகிழ்ந்து உறவாகவும்

உன்னைத் துதிக்க உன் திரு நாமம்
சரவண பவனே! சைலொளி பவனே!
திரிபுர பவனே! திகழ் ஒளி பவனே!
பரிபுர பவனே! பவம் ஒளி பவனே!

அரிதிரு மருகா! அமரா பதியைக்
காத்து தேவர்கள், கடுஞ்சிறை விடுத்தாய்!
கந்தா! குகனே! கதிர் வே லவனே!
கார்திகை மைந்தா! கடம்பா! கடம்பனை

இடும்பனை அழித்த இனியவேல் முருகா!
தணிகா சலனே! சங்கரன் புதல்வா!
கதிர்கா மத்து உறை கதிர்வேல் முருகா!
பழநிப் பதிவாழ், பால குமாரா!

ஆவினன் குடிவாழ், அழகிய வேலா!
செந்தில்மா மலையுறும் செங்கல் வராயா!
சமரா புரிவாழ், சண்முகத் தரசே!
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்

என்நா இருக்க யான் உனைப் பாட
எனைத் தொடர்ந்து இருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன், பரவச மாக
ஆடினேன் நாடினேன், ஆவினன் பூதியை

நேச முடன்யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றுது நீங்கி
உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புடன் இரட்சி அன்னமுஞ் சொன்னமும்

மெத்தமெத் தாக வேலா யுதனார்
சித்திபெற்று அடியேன் சிறப்புடன் வாழ்க!
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க!
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க!

வாழ்க வாழ்க! மலைக்குரு வாழ்க!
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்கஎன் வறுமைகள் நீங்க

எத்தனை குறைகள், எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு, பொறுப்பது உன் கடன்,
பெற்றவள் குறமகள், பெற்ற வளாமே,

பிள்ளை யென்று அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தன் என் மீது உன் மனமகிழ்ந்து அருளித்
தஞ்சம் மென்று அடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய

பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில், கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கம் துலக்கி
நேசமுடன் ஒரு நினைவது வாகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத்தாறு உருக்கொண்டு
ஓதியே செபித்து உகந்து நீறு அணிய
அஷ்டதிக்கு உள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர், சேர்ந்தங்கு அருளுவர்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழந்து நன்மை யளித்திடும்
நவமதன் எனவும் நல்லெழில் பெறுவர்
எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத்து அடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்து அடி
அறிந் தெனது உள்ளம், அஷ்டலட்சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்து உணவாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்கு, உவந்து அமுதளித்த
குருபரன், பழநிக் குன்றினில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி!
எனைத் தடுத்து ஆட்கொள, என்றனது உள்ளம்
மேவிய வடிவுறும் வேலவா போற்றி!
தேவர்கள் சேனா பதியே போற்றி!
குறமகள் மனமகிழ் கோவே போற்றி!
திறமிகு திவ்விய தேகா போற்றி!
இடும்பா யுதனே இடும்பா போற்றி!
கடம்பா போற்றி! கந்தா போற்றி!
வெட்சி புனையும் வேளே போற்றி!
உயர்கிரி கனக சபைக்கோர் அரசே!
மயில்நடம் இடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்!
சரணம் சரணம் சண்முகா சரணம்!
சரணம் சரணம் சண்முகா சரணம்!

*கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று*

# குமாரஸ்தவம்

### பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாசசுவாமிகள் அருளியது

| | | | |
|---|---|---|---|
| ஓம் ஷண்முக | பதயே | நமோ | நம |
| ஓம் ஷண்மத | பதயே | நமோ | நம |
| ஓம் ஷட்க்ரீவ | பதயே | நமோ | நம |
| ஓம் ஷட்கிரீட | பதயே | நமோ | நம |
| ஓம் ஷட்கோண | பதயே | நமோ | நம |
| ஓம் ஷட்கோச | பதயே | நமோ | நம |
| ஓம் நவநிதி | பதயே | நமோ | நம |
| ஓம் நரபதி | பதயே | நமோ | நம |
| ஓம் சுரபதி | பதயே | நமோ | நம |
| ஓம் நடச்சிவ | பதயே | நமோ | நம |
| ஓம் ஷடக்ஷர | பதயே | நமோ | நம |
| ஓம் கவிராஜ | பதயே | நமோ | நம |
| ஓம் தபராஜ | பதயே | நமோ | நம |
| ஓம் இஹபர | பதயே | நமோ | நம |
| ஓம் புகழ்முநி | பதயே | நமோ | நம |
| ஓம் ஜயஜய | பதயே | நமோ | நம |
| ஓம் நயநய | பதயே | நமோ | நம |
| ஓம் மஞ்சுள | பதயே | நமோ | நம |
| ஓம் குஞ்சரீ | பதயே | நமோ | நம |
| ஓம் வல்லி | பதயே | நமோ | நம |
| ஓம் மல்ல | பதயே | நமோ | நம |
| ஓம் அஸ்தர | பதயே | நமோ | நம |
| ஓம் சஸ்த்ர | பதயே | நமோ | நம |
| ஓம் ஷஷ்டி | பதயே | நமோ | நம |
| ஓம் இஷ்டி | பதயே | நமோ | நம |
| ஓம் அபதே | பதயே | நமோ | நம |
| ஓம் ஸபோத | பதயே | நமோ | நம |
| ஓம் வியூஹ | பதயே | நமோ | நம |
| ஓம் மயூர | பதயே | நமோ | நம |
| ஓம் பூத | பதயே | நமோ | நம |
| ஓம் வேத | பதயே | நமோ | நம |

| | | | |
|---|---|---|---|
| ஓம் புராண | பதயே | நமோ | நம |
| ஓம் பிராண | பதயே | நமோ | நம |
| ஓம் பக்த | பதயே | நமோ | நம |
| ஓம் முக்த | பதயே | நமோ | நம |
| ஓம் அகார | பதயே | நமோ | நம |
| ஓம் உகார | பதயே | நமோ | நம |
| ஓம் மகார | பதயே | நமோ | நம |
| ஓம் விகாச | பதயே | நமோ | நம |
| ஓம் ஆதி | பதயே | நமோ | நம |
| ஓம் பூதி | பதயே | நமோ | நம |
| ஓம் அமார | பதயே | நமோ | நம |
| ஓம் குமார | பதயே | நமோ | நம |

## திருமுருகப் பெருமான் அர்ச்சனை மாலை

| | |
|---|---|
| ஓம் அப்பா | போற்றி |
| " " அரனே | போற்றி |
| " " அழகா | போற்றி |
| " " அருவே | போற்றி |
| " " உருவே | போற்றி |
| " " அபயா | போற்றி |
| " " அதிகா | போற்றி |
| " " அறுபடையோய் | போற்றி |
| " " ஆறுமுகத்தரசே | போற்றி |
| " " ஆதி | போற்றி |
| " " அனாதி | போற்றி |
| " " இச்சை | போற்றி |
| " " கிரியை | போற்றி |
| " " இறைவா | போற்றி |
| " " இளையோய் | போற்றி |
| " " ஈசா | போற்றி |
| " " நேசா | போற்றி |
| " " உத்தமா | போற்றி |
| " " உயிரே | போற்றி |
| " " உணர்வே | போற்றி |
| " " உமைபாலா | போற்றி |

ஓம் எளியோய் போற்றி
“ “ எண்குணா போற்றி
“ “ ஏகா போற்றி
“ “ அனேகா போற்றி
“ “ ஒலியே போற்றி
“ “ சுடரொளியே போற்றி
“ “ கந்தா போற்றி
“ “ கடம்பா போற்றி
“ “ கருணாமூர்த்தியே போற்றி
“ “ கதிர்வேலா போற்றி
“ “ காவலா போற்றி
“ “ கார்த்திகேயா போற்றி
“ “ குகனே போற்றி
“ “ குமரா போற்றி
“ “ குறவா போற்றி
“ “ குன்றுதோர் நின்றாய் போற்றி
“ “ சரவணா போற்றி
“ “ சண்முகா போற்றி
“ “ சர்வலோகா போற்றி
“ “ சத்தியசீலா போற்றி
“ “ சிட்டனே போற்றி
“ “ சிவகுமரா போற்றி
“ “ சிவக்கொழுந்தே போற்றி
“ “ சித்தி போற்றி
“ “ முக்தி போற்றி
“ “ சூரா போற்றி
“ “ வீரா போற்றி
“ “ சுப்பிரமணியா போற்றி
“ “ செந்தமிழா போற்றி
“ “ செங்கல்வராயா போற்றி
“ “ சேவலா போற்றி
“ “ சேனாதிபதியே போற்றி
“ “ ஞான பண்டிதா போற்றி
“ “ தூயோய் போற்றி

ஓம் துரையே போற்றி
“ “ நடுவா போற்றி
“ “ நல்லோய் போற்றி
“ “ நாதா போற்றி
“ “ போதா போற்றி
“ “ நாவலா போற்றி
“ “ பாவலா போற்றி
“ “ நித்தியா போற்றி
“ “ நிமலா போற்றி
“ “ பொன்னே போற்றி
“ “ பொருளே போற்றி
“ “ புலவா போற்றி
“ “ பூரணா போற்றி
“ “ மன்னா போற்றி
“ “ மயிலோய் போற்றி
“ “ மறையே போற்றி
“ “ மணக்கோலா போற்றி
“ “ மாசிலாய் போற்றி
“ “ மால்மருகா போற்றி
“ “ முருகா போற்றி
“ “ முதல்வா போற்றி
“ “ முத்தையா போற்றி
“ “ மூவர்க்கும் மேலோய் போற்றி
“ “ வரதா போற்றி
“ “ விரதா போற்றி
“ “ விவேகா போற்றி
“ “ வித்தகா போற்றி
“ “ விசாகா போற்றி
“ “ விதியே போற்றி
“ “ கதியே போற்றி
“ “ விண்ணோர் தொழும் விமலா போற்றி
“ “ குஞ்சரி மணாளா போற்றி
“ “ பரங்குன்றின் பரமா போற்றி

| | |
|---|---|
| ஓம் சூரனை மாய்த்தோய் | போற்றி |
| " " செந்தில் செவ்வேலா | போற்றி |
| " " ஆண்டியாய் நின்றோய் | போற்றி |
| " " ஆவினன் குடியோய் | போற்றி |
| " " ஏரகப்பெருமான் | போற்றி |
| " " எம்பிரான் குருவே | போற்றி |
| " " வள்ளி மணாளா | போற்றி |
| " " வளர் தணிசேகா | போற்றி |
| " " சோலையிற் செல்வா | போற்றி |
| " " சுகமெல்லாம் தருவாய் | போற்றி |
| " " ஒழுக்கம் அருள்வாய் | போற்றி |
| " " உடல்நலம் தருவாய் | போற்றி |
| " " செருக்கினை அறுப்பாய் | போற்றி |
| " " சினம் காமம் தவிர்ப்பாய் | போற்றி |
| " " அவாவிணை அழிப்பாய் | போற்றி |
| " " அறம் பொருள் தருவாய் | போற்றி |
| " " பிறப்பை ஒழிப்பாய் | போற்றி |
| " " பெருவாழ்வு அருள்வாய் | போற்றி |
| " " சேவலும் மயிலும் | போற்றி |
| " " அன்னை தெய்வயானை | போற்றி |
| " " அருமைத்தாய் வள்ளி | போற்றி |
| " " அனைத்தும் நீயே | போற்றி |
| " " அருள்வாய் தென்பழநி ஆண்டவா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் திருப்பரங்குன்ற முருகா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் திருச்செந்தூர் முருகா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் பழநி ஆண்டவா முருகா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் சுவாமிமலை அழகா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் திருத்தணி முருகா | போற்றி போற்றியே |
| " " அருள்வாய் பழமுதிர் சோலை அழகா | போற்றி போற்றியே |

## திருப்புகழ்

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்!

ஈத லும்பல கோலா லபூஜையும்
ஓத லுங்குண ஆசா ரநீதியும்
ஈர முங்குரு சீர்பா தசேவையும் மறவாத

ஏழ்த லம்புகழ் காவே ரியால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பீர நாடா ளுநாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூ ரர்தோ ழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதெறி மாகயி லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்சைவாழ்க யானை தன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீர் அடியார் எல்லாம்

ஏறுமயில் ஏறி விளையாடும் முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம் ஒன்றே

மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே
வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றே
ஆறுமுக மான பொருள் நீ அருளல் வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே

## வாழ்த்து

எல்லா வளத்தோடும் என்றும் நலம் தரவே
வல்லாய் திருமகளே வந்திடுக - சொல்லாலே
பாடிப் பரவுகிறோம் பால் போல இம்மனையில்
கூடி வருவாய் குழைந்து

என்னருங் கலைகள் வாழி இறைவன் நா என்றும் வாழி
உண்ணிறை சக்தி பீடம் ஓம் எனும் ஒலியில் வாழி
கண்ணிறை மணியேயான கருமறைப் பொருளே வாழி
எண்டிசை உலகமெல்லாம் விண்டுனை வாழிவாழி!

வான்முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன் முறை அரசு செய்க
குறை விலாது உயிர்கள் வாழ்க
நான் மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி
விளங்குக உலகம் எல்லாம்.

## மங்களம்

மங்களம் ஜெயமங்களம்
மங்களம் ஜெயமங்களம்

பழநி மலை வாழுகின்ற பாலனுக்கு மங்களம்
பழம் உதிரும் சோலையிலே அழகனுக்கு மங்களம்

அலையோரம் வாழுகின்ற செந்திலுக்கு மங்களம்
அப்பனுக்கு பாடம்சொன்ன சுப்பனுக்கு மங்களம்

வழித்துணையாய் வருகின்ற திருத்தணிக்கு மங்களம்
வள்ளல் தொழும் திருப்பரங்குன்ற தீரனுக்கு மங்களம்

வேலெடுத்து மயிலில் வந்த வேலனுக்கு மங்களம்
வினையகற்றி செயல்புரியும் வேந்தனுக்கு மங்களம்

அரோகரா கோஷம் போட்ட அனைவருக்கும் மங்களம்
அன்னதானம் செய்கின்ற சுவாமிக்கு மங்களம்

பூஜையை நடத்தித் தந்த குருசாமிக்கு மங்களம்
பூஜையில் பாடிய அனைவருக்கும் மங்களம்

வல்லக்கோட்டை முருகன் ஆசியில்
மலர்ந்த பாடல் தொகுப்பினை
குரு அருள் பெறவேண்டி
எங்கள் குருசாமி
ஐயா





**AR.M. இலட்சுமணன்**
**Founder KKVK TRUST**
அவர்களுக்கும்
அவர்தம் முருகனடி சேர்ந்த துணைவியார்
**சுந்தரேஸ்வரி ஆச்சி**
அவர்களுக்கும் சமர்பிக்கிறோம்



வல்லக்கோட்டை பழனி பாத யாத்திரை குழு
தாம்பரம், சென்னை 45

